இரண்டு
புத்தகங்கள்!

ஆண்டு மலர்

# கல்கி

KALKI
6.8.2000
ரூ. 5.00





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

## முடிவுகள்



• வாஸந்தி



• பா. சுந்தரேசன்



• சுதாங்கன்



• சாருநிவேதிதா

ஆயிரக்கணக்கான வாசக எழுத்தாளர்கள் கலந்து கொண்டு சிறப்பித்த இவ்வாண்டு சிறுகதைப் போட்டிக்கு கல்கி ஆசிரியர் மற்றும் பதிப்பாளருடன் எழுத்தாளர்கள் வாஸந்தி, ப.சுந்தரேசன், சாருநிவேதிதா, சுதாங்கன் ஆகியோர் இணைந்து நடுவர்களாக இருந்து, பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுத்தார்கள்.

**ரூ. 5000 முதல் பரிசு பெறும் கதை**

**விலை**

எழுதியவர் : வெ. ஜானகி,
8, டி.டி.கே. முதல் குறுக்குத் தெரு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 18.

**ரூ. 3000 இரண்டாம் பரிசுக் கதை :**

**சமத்துவ பூமி**

எஸ். சம்பத்குமார் (பிங்காக்ஷன்)
32, Stanley Road, Manor Park, London E 12 6 RJ.

**ரூ. 2000 மூன்றாம் பரிசுக் கதை**

**'மேரை'**

செய்யாறு தி. தா. நாராயணன், 50/2, புதுத் தெரு, செய்யாறு
(தி.மலை மாவட்டம்)604 407.

பரிசு பெற்றோருக்கு வாழ்த்துகள். கலந்து கொண்ட அனைத்து வாசகர்களுக்கும் நன்றி. முதல் பரிசுக் கதை இவ்விதழில் (பக்.20) பிரசுரமாகிறது. பிரசுரத்துக்குத் தேர்வான பிற கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்.

– ஆசிரியர்.

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com    ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

**பதவியேற்ற முப்பது நாட்களுக்குள் தமிழகத்தின் அனைத்து மாவட்டங்களுக்கும் சுற்றுப்பயணம் செய்துவிட்டு வந்திருக்கிறார் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன். வந்த சூட்டில் கிளம்பிய (வழக்கமான) உட்கட்சிப் புகைச்சலில் மிகவும் கடுப்பாக இருந்தார். பதில்களைப் பாருங்கள்!**



# "முகமூடி கிழியும்!"

**"தங்கபாலு, திண்டிவனம் ராமமூர்த்தி, அருணாசலம் ஆகியோர் நீங்கள் நடத்திய காமராஜ் விழாவைப் புறக்கணித்து விட்டார்களே!"**

"அவர்கள் ஏன் புறக்கணித்தார்கள் என்று அவர்களைத்தான் கேட்க வேண்டும். அவர்கள் காமராஜரைப் புறக்கணித்ததாகத்தான் நான் கருதுகிறேன்."

**"உங்களை எதிர்த்து எல்லா கோஷ்டிகளும் தோள்தட்டுகின்றனவே!"**

"அகில இந்திய அளவில் காங்கிரஸில் சிலர் சோனியாவுக்கு எதிராகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் ஏஜெண்டுகளாகத் தமிழ்நாட்டில் சிலர் இருக்கிறார்கள். அவர்கள்தான் இப்படி கோஷ்டி கானம் பாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் முகமூடி விரைவில் கிழிக்கப்படும்!"

**"கட்சித் தேர்தலை விரைவில் நடத்தி முடிக்க வேண்டும்" என்று திண்டிவனம் ராமமூர்த்தி கேட்டிருக்கிறாரே?"**

"கட்சியினுடைய பதிவேடுகள், கணிப்பொறி, ஏன் கொடிமரத்தைக் கூட வெட்டிக் கொண்டு போய் விட்டவர் திண்டிவனம். அவர் மேல் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட இருக்கிறது. அவர் கட்சியிலிருப்பாரா என்பதே கேள்விக்குறி! உட்கட்சித் தேர்தலை நடத்தச் சொல்ல அவருக்கு சிறிதும் அருகதை இல்லை!"

**"நீங்கள் பா.ம.க.வைத் தடைசெய்ய வேண்டும் என்கிறீர்கள். ஆனால் மேலிடத்தைச் சேர்ந்த அனில் சாஸ்திரி, 'பா.ம.க. எங்கள் கூட்டணிக்கு வருவதைப் பற்றி, எந்தச் சங்கடமும் கிடையாது என்ற ரீதியில் பதில் சொல்லியிருக்கிறாரே! ஏன் இந்த முரண்பாடு?"**

"அனில்சாஸ்திரியிடம், 'பா.ம.க. உங்கள் கூட்டணிக்கு வந்தால் ஏற்றுக் கொள்வீர்களா?' என்று நிருபர்கள் கேட்டார்கள். அதற்கு அவர் எந்தக் கட்சிப் பெயரையும் குறிப்பிடாமல் 'தேர்தல் சமயத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கூடி விவாதித்து மேலிடத்துக்கு விவரங்களைத் தெரிவிக்கும்; மேலிட முடிவின் அடிப்படையில் கூட்டணி அமைக்கப்படும்' என்றுதான் சொன்னார்!"

**"இந்த கோஷ்டி விவகாரங்கள் உங்களுக்கு எப்போதுமே போரடித்ததில்லையா?"**

"முப்பத்தைந்து வருடங்களாகக் காங்கிரஸில் இருக்கிறேன். அந்தச் சூழலில் ஊறிப் போனவன். இந்தக் கோஷ்டிப்பூசலில் நீச்சலடிப்பது எனக்கு பெரிய விஷயமல்ல; உங்களுக்குத் தெரியுமா? நான் உண்மையிலேயே நல்ல நீச்சல்காரன்!"

சந்திப்பு : **ப்ரியன்**

பாதுகாப்பான முதலீடு – நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

## முதலீடுகளுக்கு வழங்கப்படும் வட்டி விகிதங்கள்

| காலம் | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) | | | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS - I) | | |
|---|---|---|---|---|---|---|
| | வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் | | அதிகபட்ச முதலீடு (வரிப்பிடித்தம் இல்லாமல், 15H படிவம் இல்லாமல்) | முதிர்வுத் தொகை ரூ. 5,000/- த்திற்கு | ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வருவாய் விகிதம் | அதிகபட்ச முதலீடு (வரிப்பிடித்தம் இல்லாமல், 15H படிவம் இல்லாமல்) |
| | மாதத்திற்கு | காலாண்டிற்கு | | | | |
| 12 மாதங்கள் | - | 10.59% | ரூ.47,000/- | ரூ. 5,551/- | 11.02% | ரூ. 45,000/- |
| 24 மாதங்கள் | - | 11.10% | ரூ.45,000/- | ரூ. 6,224/- | 12.24% | ரூ. 38,000/- |
| 36 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ.41,000/- | ரூ. 7,155/- | 14.37% | ரூ. 31,000/- |
| 48 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ.41,000/- | ரூ. 8,061/- | 15.31% | ரூ. 27,000/- |
| 60 மாதங்கள் | 12.00% | 12.12% | ரூ.41,000/- | ரூ. 9,085/- | 16.34% | ரூ. 24,000/- |

## திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS - II)

| காலம் | குறைந்த அளவு டெபாசிட் ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வட்டி விகிதம் | அதிகபட்ச முதலீடு (வரிப்பிடித்தம் இல்லாமல், 15H படிவம் இல்லாமல்) ரூ. |
|---|---|---|---|---|
| 60 மாதங்கள் | 550/- | 1,000/- | 16.34% | 23,650/- |




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)


பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894 மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in

Visit us at : www.tnpowerfinance.com / www.tninfrafinance.com


29-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.



# மனசுக்குள் மண்வாசம்

## 1. கீழ்வெண்மணி

திருவாரூரில் இருந்து முப்பத்தைந்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது அந்தக் கிராமம். பேருந்தை விட்டு இறங்கி, மண்ணில் கால் வைத்ததுமே, ஒரு மெல்லிய கலவர உணர்வு, இதயத்தைக் கடந்து போகிறது. அங்கே புதிதாகச் செல்கிற யாருக்கும் ஒரு கணம் அந்தப் படபடப்பு வந்தேதீரும். மனித சமுதாயம் வெட்கித் தலைகுனிந்த, அந்த கோரக் கொடுமை நிகழ்ந்து, இருபத்தைந்து ஆண்டுகள் நிறைந்த போது ஊரின் முகப்பில் கட்டப்பட்டிருக்கிறது ஒரு பிரமாண்ட நுழைவாயில். அதைக் கடந்து நடக்கிறோம். எங்கிருந்தோ வரும் நடவுப்பாடல் காதுகளில் மோதுகிறது.

*"மண்ணு சிவந்திடுச்சி...*
*மாரிமழை பொய்ச்சிடுச்சி...*
*வெந்து மடிஞ்ச சனம் வருமா?*
*வேகமா நடவு போடு*
*வேலம்மா!"*

பாடல் வரும் திசையை நோக்கி நடக்கிறோம். கொஞ்ச தூரத்தில் தரிசாகக் கிடக்கும் வயல்களின் நடுவே, ஓரிடம் மட்டும் வளைக் கரங்களின் உதவியோடு பசுமையாக மாறிக் கொண்டிருந்தது.

ஆம்! கீழ்வெண்மணியின் நடப்பாண்டிற்கான முதல் குறுவை நடவு அன்றுதான் தொடங்கியது. வயலை நெருங்கியதும், புதிய முகங்களாகத் தெரிந்த நம்மைக் கேள்விக் குறியோடு பார்க்கிறார்கள் நடவுப் பெண்கள். அதற்குள் கேள்வியை நாமே கேட்டு விட்டோம்.

"நடவுக் கூலி இப்போ எவ்வளவு கொடுக்கிறாங்க?"

"எங்களுக்கு ஐம்பது ரூபா, ஆம்பிளை ஆளுக்கு அறுபத்தஞ்சு ரூவா!"

"இப்போதெல்லாம் கூலிப் பிரச்னை வர்றதில்லையா?"

"அதெல்லாம் ஒரு பிரச்னையும் இல்லை. கட்சி சொல்லிட்டா, அதுக்கு மறுபேச்சு இல்லை."

• தியாகிகள் நினைவிட ஸ்தூபி

ஆச்சர்யமாக அடுத்தக் கேள்விக்குத் தயாரானபோது, நம் தோளைத் தொட்டது ஒரு கரம். திரும்பிப் பார்த்தபோது அவரே தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

"எம்பேர் செல்லமுத்து. நான் இந்த ஊர் பஞ்சாயத்து தலைவர். வாங்க, தியாகிகள் நினைவிடத்துக்குப் பேசிக்கிட்டே போகலாம்."

அவரைப் பின் தொடர்ந்து நடக்கிறோம்.

"நீங்க நிறைய கற்பனையோடு இங்கே வந்திருக்கலாம். இத்தனை உயிரை விலையாகக் கொடுத்ததனால், இந்த ஊரே சொர்க்கமா மாறி இருக்கும்னு நினைச்சிருந்தா அதை

மாத்திக்குங்க! குடி நீர், மின்சாரம் தவிர இங்கே சாலை வசதி இல்லை, டெலிபோன் கிடையாது, போஸ்ட் ஆபீஸ் கிடையாது, சுகாதார நிலையம், கால்நடை மருத்துவமனை இதெல்லாமும் கிடையாது. கடந்த முப்பது வருஷத்தில் மற்ற விவசாய கிராமங்கள் எந்த அளவு வளர்ச்சி அடைஞ்சிருக்கோ, அதே அளவு அல்லது அதைவிடக் குறைவான வளர்ச்சிதான் இங்கே."

"அப்போ இன்னும் இங்கே விவசாயத் தொழிலாளர்கள்தான் அதிகமா இருக்காங்களா?"

"ஆரம்பத்தில் எல்லோருமே விவசாயத் தொழிலாளிகள்தான். இப்ப பாதிபேர் குறு விவசாயிகளா மாறி இருக்காங்க. எல்லோருமே நிலமுள்ள விவசாயிகளாக மாறுவது அரசாங்கத்தின் கையிலும் நீதிமன்றத்தின் கையிலும்தான் இருக்கு. நில உச்ச வரம்பு சட்டத்தின் மூலம் பறி முதல் செய்யப்பட்ட நிலங்கள் இன்னும் சரியானபடி பிரிச்சுக் கொடுக்கப்படவில்லை. அந்த வழக்கு இன்னும் நிலுவையில் இருக்கு'' என்ற செல்லமுத்துவிடம் சமுதாய ரீதியாக என்ன மாற்றம் நடந்திருக்கிறது என்றதும் "மிகப் பெரிய மாற்றம்'' என்றவரின் கண்களில் பெருமிதம் ஜொலித்தது.



• அண்ணாதுரை



• பழநி



• செல்லமுத்து

• காத்தமுத்து

''அதற்குக் காரணமா இருந்த நாற்பத்து நான்கு பேரை ஒரே குடிசைக்குள் பூட்டி உயிரோடு கொளுத்திக் கொன்னாங்க. எரியற குடிசைலேர்ந்து வெளியே குதிச்சு தப்பிச்ச பழனி இவர்தான்."

**ப**ழனி நம்மிடம் பேசினார்.

''எனக்கு அஞ்சு வயசு இருக்கும். எங்க தாத்தா உடம்பு சரியில்லேன்னு பண்ணை வேலைக்குப் போகலே. அதனால சாட்டையால் அடிச்சு சாணிப்பால் குடிக்க வெச்சாங்க. இதே மாதிரி அக்கிரமம் இந்த நாடு முழுக்க நடந்திருக்கு. சுதந்திரத்துக்குப் பிறகு இதையெல்லாம் தலைகீழா மாத்தி, எங்களுக்குத் தைரியத்தைக் கொடுத்தது எங்க செங்கொடி இயக்கம்தான். கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சியைப் பொறுத்துக்க முடியாமல் அந்தக் கட்சியை ஒழிக்க நினைச்சாங்க. அதுக்கு மிராசுதாருங்க கூலிப் பிரச்னையை ஒரு ஆயுதமா எடுத்துகிட்டாங்க. அதுக்குதான் இந்த கிராமத்திலே நாற்பத்திநாலுபேர் எரியற நெருப்பிலே உயிரைக் கொடுத்தாங்க." என்று பெருமூச்சு விட்டவரின் கண்கள் கலங்கின.

சுப்ரமண்யன் தொடர்ந்து பேசினார்.

"சம்பவம் நடந்தப்போ எனக்கு நாற்பது வயசு. இப்போ எழுபத்துரெண்டு. இப்போ நெனைச்சாலும் உடம்பெல்லாம் எரியற மாதிரி இருக்கு. அப்போ எங்க கிராம சிபிஎம் கிளைக்கு முத்துசாமிதான் தலைவர். கிடைக்











• கீழ்வெண்மணியில் முதல் நடவு...

கிற விளைச்சலட ஒரு கலம் நெல்லுக்கு ஒரு மரக்கால் கூலி வேணும்னு கேட்டோம். அப்போ மிராகதாருங்க எல்லாம் சேர்ந்து நெல் உற்பத்தியாளர் கழகம் வெச்சிருந்தாங்க. இரண்டு மரக்கால் கூட கூலி கூட்டித்தர்றோம். ஆனா செங்கொடியை இறக்கிட்டு, எங்கள் மஞ்சள் கொடியை ஏத்தனும். உங்க கட்சிக்கு இங்கே இடமில்லேன்னாங்க. பட்டினி கிடந்து செத்தாலும் செங்கொடியை இறக்கமுடியாதுன்னு மறுத்துட்டோம். அன்னைக்கி கிருஸ்துமஸ். காலையில் பத்துமணி இருக்கும். தூரத்தில் அடியாட்கள் ஒரு கூட்டமா துப்பாக்கியோடு எங்க காலனியை நோக்கி வந்துகிட்டு இருந்தாங்க. நாங்க எழுந்து ஓட ஆரம்பிச்சோம். ஆனா அவுங்க விடலே. எங்களைச் சுட்டாங்க. ஊருக்கு நடுவுலே ராமையான்னு ஒரு தோழர் வீடு. அந்த வீட்டு நடுவிலே இருந்த பெரிய மண் பத்தாயத்தை சுத்தியிருந்த இடுக்கிலே கிட்டத்திட்ட ஐம்பதுபேர் ஒளிஞ்சுகிட்டோம். மற்ற எல்லோரும் கண்கண்ட திசையில ஓடினாங்க. ஆனா வெளியே நின்ன அடியாட்கள் ஐம்பதுபேர் ஒளிஞ்சிருந்தவங்களை பெட்ரோல் ஊத்திக் கொளுத்தினாங்க.நான் எகிறிக் குதிச்சு ஓடி, இன்னொரு வீட்டில் நுழைஞ்சேன். துரத்தினாங்க. எரியற குடிசையிலேர்ந்து ஒரு அம்மா தன்னோட குழந்தையை வெளியே வீசி எறிஞ்சுது. ஆனா அந்தக் குழந்தையை மறுபடியும் எரிகிற குடிசையில தூக்கிப் போட்டாங்க. மொத்தமிருந்த முப்பத்து மூணு குடிசையில் இருபத்தஞ்சு எரிஞ்சு சாம்பலா போச்சு..."

"அறுபத்தெட்டுக்குப் பிறகு வெண்மணியின் சமூக நிலை நிறையவே மாறிப்போச்சுங்க. இங்கே இருக்கிற பிற்படுத்தப்பட்ட மக்களை மத்தவங்க சக மனிதர்களாகப் பார்த்துப் பழகுறாங்க. ஜாதி உணர்வெல்லாம் இங்கே இல்லை. அவங்க வீட்டு விசேஷங்களுக்கு அழைப்பிதழ் கொடுத்துக் கூப்பிடறாங்க. இவங்களும் கூப்பிடறாங்க. கூலிப் பிரச்னை இல்லே. எந்த பிரச்னையாக இருந்தாலும் பேசித் தீர்த்துக்கறோம். அதுக்குக் கட்சி பெரிய பலமாகவும் பாலமாகவும் இருக்கு" என்கிறார் சி.பி.எம். கட்சியின் ஒன்றிய துணைத் தலைவர் காத்தமுத்து. அதை உறுதி செய்கிறார் பிற்பட்ட சமூகத்தைச் சேர்ந்த அண்ணாதுரை.

வெண்மணி விவசாயத் தொழிலாளர்களின் குழந்தைகளில் எத்தனைபேர் கல்லூரிகளை எட்டிப் பிடித்திருக்கிறார்கள்? விரல்விட்டு எண்ணிவிடலாம் என்றாலும், ஆசிரியர், எஞ்ஜினியர், என வெவ்வேறு துறைகளில் சாதித்திருக்கிறார்கள்.

அங்கிருந்து நாற்பத்து நான்கு பேர் உயிர் துறந்த இடத்தை நோக்கி நடக்கிறோம்.

நினைவு ஸ்தூபியும், நினைவுக் கோயிலும் கண்ணில் தெரிய, நெருங்கினோம். இந்த முறை நினைவிடத்திலிருந்து ஒரு தாலாட்டுப் பாடல்.

அதிலும்கூட வெண்மணியின் தியாகம் தான் வித்து. மணியம்மாள் தான் பேரனைத் தூங்கவைக்கப் பாடிக் கொண்டிருந்தார். எந்தக் குழந்தை இத்தனை வெப்பமான தியாகத்தைக் கேட்டுக் கண்ணுறங்கும்?

"தஞ்சை மாவட்டம் முழுக்க வெண்மணிப் பாடல்கள் ரொம்பப் பிரபலம். கீழத் தஞ்சையிலே குழந்தைகளுக்கு வெண்மணின்னு நிறைய பேரு வெச்சிருக்கோம். அதுமட்டுமல்ல! இந்திரா பார்த்தசாரதி, வெண்மணியை மையமா வெச்சு குருதிப்புனலும், ர.க. நல்லபெருமாள் செந்நெல் நாவலும் எழுதியிருக்காங்க." என்கிறார் ஜெயராமன்.

இவரும், இவரது இயக்கத் தோழர்களும் சேர்ந்து, 'வெண்மணி தோழர்கள் ரத்த தானக் கழகம்' நடத்துகிறார்கள். இதுவரை பல உயிர்களைக் காப்பாற்றியிருக்கிறது வெண்மணி ரத்தம்.

காவிரியின் கிளையாறுகள் மெல்ல மெல்ல மெலிந்து, வாய்க்கால்களாய் வளைந்து எஞ்சிய, கொஞ்ச தண்ணீரை எடுத்துச் செல்லும் கடைமடை பாசனத்தின் தயவில் சுவாசித்துக் கொண்டிருக்கும் இந்த கிராமத்தில் இதுவரை எந்த சாதிச் சங்கமோ, பிறகட்சிகளோ நுழைய முடியவில்லை. வெண்மணி சம்பவம் மூலம் வர்க்கக் கறைபடிந்த அவமானத்தால் வெட்கித் தலைகுனிந்து, இருதரப்பிலும் ஒரு குடும்பம் கூட இந்த கிராமத்தைவிட்டு குடி பெயர்ந்து விடவில்லை.

அதுதான் மண்வாசம் என்பதா?

**— ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள் : **வெங்கடேஷ்**



# உயிரைக் காக்க உதவுங்கள்!!

என் மகன் சதீஷ்குமார் (வயது 2½) இருதயத்தின் வால்வுகள் பழுதடைந்து டாக்டர்கள் பரிந்துரையின் பேரில் சென்னை அப்போலோ மருத்துவமனையில் **5.8.2000** அன்று இருதய அறுவை சிகிச்சை செய்ய உத்தேசித்து அதற்கு ரூ. **1,20,000/-** (ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாய்) செலவு ஆகும் என்று கூறியுள்ளனர். தினக் கூலித் தொழிலாளியாகிய எனக்கு அந்த அளவு பணம் செலவு செய்ய வழியில்லாத காரணத்தால் நல்ல உள்ளம் படைத்த அன்பர்கள் தயவு செய்து தங்களால் இயன்ற அளவு பண உதவி செய்து என் குழந்தையின் உயிரைக் காக்க உதவுமாறு மிக்க தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு

E. முரளி

**Address:**
**E. Murali**
**F/o Master Satish Kumar**
**32, Chinna babu street,**
**Nammalwarpet,**
**Chennai - 600 012**

**Master M. Satish Kumar,**
**C/o Apollo Hospital,**
**21, Greams Lane, (Off: Greams Road)**
**Chennai - 600 006.**
**Ph: 8293333 / 8293551**

# 1

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்று ஆறு ஆக
ஆருயிர் காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு
அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான்
அவன் நம்மை
அளித்துக் காப்பான்.

கோசல நாட்டை ஆண்ட தசரத சக்ரவர்த்திக்குப் பல்லாண்டுகள் மக்கட்பேறு இல்லை. இக்குறையைக் களைய அம் மன்னன் தலைநகர் அயோத்தியிலே அச்வ மேத யாகமும் புத்ர காமேஷ்டி யாகமும் செய்தான். அந்த யாகத்துக்கு இந்திரனுள்

# ஸ்ரீ ராம பக்த ஹனுமான்

விட்ட தேவர் குழாமெல்லாம் வந்திருந் தனர்...

'ஏதேது! ஸ்ரீ ராம பக்த ஹனுமான் கதையை தசரதனிடமிருந்தா ஆரம்பிக்க வேண்டும்?' என்று கேட்பீர்கள்.

காரணம் இருக்கிறது. கேளுங்கள்...

அசுவமேத யாகத்துக்குத் திருமகள் கேள்வனான சாக்ஷாத் ஸ்ரீமன் நாரா யணனும் வருகை தந்தார்!

வால்மீகி ராமாயணத்திலே பால காண்டத்திலே வருகிறது இந்த விவர மெல்லாம்...

ராவணனின் கொடுமை தாங்காமல் தேவர்கள் எல்லோரும் மஹா விஷ்ணுவைச் சரணடைந்து, மண்ணுலகிலே வந்து பிறக்கும்படி அவனை வேண்டியிருந்தார் கள்.

ராவணனுக்குப் பிரும்மா அளித்த வரத்தின்படி தேவர்களாலும் மூவராலும் அழிவு கிடையாது; மானிடரைத் தவிர வேறு யாராலும் அவனுக்கு மரணம் ஏற்படாது என்பதே வரம்.

அதனால்தான் தசரதன் அச்வமேத யாகம் செய்ததற்குப் பலனாய் பகவானும் தாமே அவரது புதல்வனாக அவதரித்து ராவண வதம் செய்வதாக வாக்களித் தார்.

அவர் வாக்களித்ததும் பிரும்ம தேவனுக்குப் பொறுப்பு அதிகமாகப் போய் விட்டது! அவன் என்ன செய்தான், அத் தனை தேவர்களையும் அழைத்து உத்தரவு போட ஆரம்பித்து விட்டான்!

"தேவர்களே! ஸ்ரீ மஹா விஷ்ணு தாம் மொழிந்த மொழி தவறாமல் மானிடனாக அவதரித்து, ராவ ணனை அழிக்கப் போகிறார். அந்தத் திரு மாலுக்குப் படையினராக இருந்து ராக்ஷ ஸர்களுடன் போர் புரிந்து வீழ்த்தக்கூடிய வீரர்களை நீங்கள்தான் படைத்துத் தர வேண்டும். முன்னுதாரணமாக இந்தக் காரியத்துக்கு இதோ ஜாம்பவானை நான் படைத்திருக்கிறேன்..." என்றான் பிரும்மா.

உடனே தேவர்களும் ஸ்ரீ ராமனுக்கு உதவும்படியான புதல்வர்களைப் பெற் றெடுத்தார்கள். இந்திரன் வாலியையும் சூரியன் சுக்ரீவனையும் தேவகுருவான ப்ருஹஸ்பதி தாரனையும் குபேரன் கந்த மாதனையும் அக்னி, நீலனையும் அசுவினி தேவர்கள் இருவரும் முறையே மைந்த த்விதர்களையும் வருணன் சுஷேணனையும் வாயு ஹனுமானையும் பெற்றனர். மிகுந்த

கல்யாணபுரம் ஆராவமுதன்

பராக்கிரமசாலியான வாலி, இவர்கள் அனைவரையும் காத்து வந்தான்.

– இது வால்மீகி ராமாயணம் காட்டும் காட்சி. (பாலகாண்டம் 17வது ஸர்கம்)

இதையே கம்பன் கூறுகையில், அந்தத் திருமாலே தன்னைச் சரணடைந்த தேவர்களை நோக்கி ''நீங்கள் மண்ணுலகில் வானரர்களாகப் பிறக்கக் கடவீர்'' என்று ஆணையிட்டதாகச் சொல்கிறார்.

கம்ப நாடனைப் பின்பற்றி ராமநாடகம் இயற்றிய அருணாசலக் கவிராயர், திருமாலே தேவர்களை அழைத்து, யார் யார் எந்தெந்த உருவில் மண்ணுலகில் பிறக்க வேண்டும் என்று அருளுவதாக ஒரு பாடலில் குறிப்பிடுகிறார்:

அவதாரம் செய்திடுவீரே – நீங்கள்
அரக்கர் பயத்தை விடுவீரே
கவன வாலியும் சுக்ரீவனுமாகி
கண்ணாயிரவனும் கதிரோனும் போகி



# அருள்வாக்கு

ஓர் ஆயுள் கால ஸேமிப்பும் போதாமல் கடன் கஸ்தி வாங்கித் தான் கல்யாணம் பண்ண வேண்டும் என்ற நிலையில் அநேகக் குடும்பங்களை வைத்திருக்கிற வரையில் நமக்கு மற்ற பரோபகாரத் தொண்டுகள், ஜீவாத்மா கைங்கர்யங்களைப் பற்றிப் பேசவே வாயக்கில்லை என்று தோன்றுகிறது.

வெயில் காலத்தில் விசிறி, குடை தானம்; குளிர்காலத்தில் கம்பளிதானம்; பஞ்ச காலத்தில் அன்னதானம் என்றெல்லாம் சாஸ்திரங்களில் சிறப்பித்துச் சொல்லியிருக்கிற எல்லா தானங்களையும்விட, 'வரதக்ஷிணை' என்று அதிகாரப் பிச்சையாக தானம் வாங்குவதை நிறுத்துவது தான் பெரிய தானம் என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றதெல்லாம் ஒரு பீரியட்டுக்கு (கால கட்டத்துக்கு) மட்டும்தான் பயனாவது. வரதக்ஷிணையோ இன்றைக்கு ஒருத்தனுடைய வாழ்நாள் முழுதையும் (பெண்ணைப் பெற்றவனைத்தான் சொல்கிறேன்) பாதிப்பதோடு, எதிர்காலம் பூராவுக்கும் நம்முடைய சாஸ்திரீயமான வாழ்க்கை முறையையும், சாச்வதமான ஸ்திரீ தர்மத்தையும் பாதிப்பதாக இருக்கிறது. ஆனபடியால் வரதக்ஷிணை வாங்காமலிருப்பது நிரந்தர தர்மதானம் என்று சொல்லலாம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

*அதிகம் ஆனருத்திரன் அங்கச அனுமசிலன்*
*அக்னியே சேனைக்கதிபன் ஆன நீலன்*
*சதுர்முகப் பிரம்மாவே சாம்பவன் எனும்*
*காலன்*
*தரும் உபேந்திரன் வாலி தனக்குப் பாலன்*

ருத்திரனின் அம்சமாக ஹனுமார் அவதரித்தார் என்கிறார் கவிராயர்.

ஸத்குரு தியாகபிரும்மமும் தமது 'ஆட மோடி கலதே' என்ற சாருகேசி ராகக் கீர்த்தனையில் ஹனுமானை ருத்ரனின் அம்சமாக வர்ணிக்கிறார்:

'கலைகள் அனைத்தையும் கற்று, சிவ பெருமானின் அம்சமாகப் பிறந்த ஹனுமான் உன்னை வணங்கினானே! ராமா!' என்ற பொருள் படப் பாடியிருக்கிறார்.

ஆனால் ஸமர்த்த ராமதாஸர் என்ன சொல்கிறார் தெரியுமா...?

சத்ரபதி சிவாஜியின் குரு இந்த ஸமர்த்த ராமதாஸர். சிறந்த ஆஞ்சநேய பக்தர். இவர் காலத்தில்தான் – (17 ஆம் நூற்றாண்டு) தஞ்சையை மராட்டிய மன்னர்கள் ஆண்ட காலத்தில்தான் – ஹரிகதை என்கிற உன்னதமான கலை தமிழ்நாட்டில் அறிமுகமானது. ஹரிகதையின் மேன்மையை விளக்குகிற ஒரு நூலே எழுதியிருக்கிறார் ஸமர்த்த ராமதாஸர். 'தாஸபோதம்' என்று அந்த நூலுக்குப் பெயர்.

இந்த ஸமர்த்த ராமதாஸர் கருத்துப்படி ஹனுமான் ராமபிரானுக்கு ஈடானவர்!

ஒரு சுவையான நிகழ்ச்சியைச் சொல்கிறார் ராமதாஸர்.

தசரதன் புத்ரகாமேஷ்டி யாகம் செய்த போது கிடைத்த தெய்வீக பாயசத்தைத் தமது மனைவிகளான கௌசல்யை, சுமித்திரை, கைகேயி ஆகிய மூவருக்கும் அளித்தார். அப்போது சுமித்திரை கையிலிருந்த பாயசத்தை வாயுதேவன் எடுத்துச் சென்று தன் மனைவியான அஞ்சனைக்குக் கொடுத்தானாம். அஞ்சனையும் அதைப் பருகி, **ராமபிரானுக்குச் சமமான பராக்கிரமத்துடன்** ஆஞ்சநேயன் என்ற மகனைப் பெற்றாள்.

– இதுதான் ராமதாஸரின் கருத்துப்படி ஆஞ்சநேயர் தோன்றிய கதை.

ஹனுமானும் ஓர் அவதார புருஷனே ஆகிறான் அல்லவா!

ராமன் தர்மத்தை நிலை நாட்ட அவதரித்தான்; ஹனுமான் பக்தியை நிலை நாட்ட அவதரித்தான் – ஆஞ்சநேயனின் வரலாறு என்பதே ஒரு ராம பக்தி சாம்ராஜ்யம்தான். அந்த பக்தி சாம்ராஜ்யத்தின் ஈடு இணையற்ற சக்கரவர்த்தி ஹனுமான்.

அஞ்சனையின் புதல்வன் ராமதாஸனாக ஆனது எப்படி...? அடுத்த வாரம் வரை பொறுங்கள்.

(வளரும்)

# சீருக்கு சிறப்பு

## அடையார் ஆனந்த பவன்
## அளிக்கும் மங்களகரமான
# சீர்வரிசை

பாங்கான பருப்புத் தேங்காய், மொறு மொறுப்பான கைமுறுக்கு, சுவையான அதிரசம், தேன்குழல், தட்டை, சீடை ... மைசூர் பாக், பாதுஷா, மற்றும் லட்டு ... உங்கள் வீட்டுத் திருமணம் என்றுமே நினைவில் நிலைத்து நிற்க அடையார் ஆனந்த பவன் சீர் வரிசை. சுத்தமான நெய் மற்றும் இருமுறை சுத்திகரிக்கப்பட்ட கடலை எண்ணையில் தரமாகத் தயாரிக்கப்பட்டவை!










ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ் (A/C)

சென்னை

- அடையார் ✆4912047
- புரசைவாக்கம் ✆6421626
- ஜார்ஜ் டவுன் ✆5388845
- அண்ணா நகர் ✆6206377
- வண்ணாரப்பேட்டை ✆5964291
- தி.நகர் ✆4328550

Visit our website at www.aabsweets.com



2000 ஆகஸ்ட் 6
விக்ரம ஆடி 22
மலர் : 59
இதழ் : 1

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



## தாக்கரேயின் வெற்றி; சட்டத்தின் தோல்வி!

ராம் ஜெத்மலானி 'வெற்றிக் களிப்புடன்' எகத்தாளமாகச் சிரிக்கிறார்.

சில தினங்களுக்கு முன்னர்தான் ஜெத்மலானியின் ராஜினாமாவைக் கோரிய பிரதமர் வாஜ்பாயோ, இப்போது ஜெத்மலானிக்கு நற்சான்றிதழ் வழங்கி, தாம் அவருடைய ராஜினாமாவைக் கோரியது அவரது நேர்மையையோ விசுவாசத்தையோ சந்தேகித்ததால் அல்ல என்று விளக்கவுரை வழங்குகிறார்! மஹாராஷ்டிர அரசு பால்தாக்கரே மீது வழக்குத் தொடர இருப்பதை அறிந்த ஜெத்மலானி, அவ்வழக்கு காலந் தாழ்ந்து விட்டதால் செல்லுபடியாகாது என்று சுட்டிக்காட்டியதோடு நில்லாமல், உச்சநீதிமன்றத்தையும் அட்டோர்னி ஜெனரலையும் குறைகூறி வேறு விமர்சித்தார். அமைச்சரின் இந்த அத்துமீறலே பிரதமரின் கோபத்துக்கு அவரை ஆளாக்கியது.

மும்பை மாஜிஸ்திரேட் நீதிமன்றம், ஜெத்மலானி சுட்டிக்காட்டியது போலவே, வழக்குப் பதிவுசெய்யக்கூடிய காலக்கெடு முடிந்துவிட்டதாகக் காரணம் காட்டி வழக்கை நிராகரித்து விட்டது. ஜெத்மலானி 'ஜெயித்து விட' பிரதமரின் நிலை தர்மசங்கடமாகியிருக்கிறது.

ஜெத்மலானி சொன்னதும் சரி, மாஜிஸ்திரேட் நீதிமன்றத்தின் முடிவும் சரி, சட்டப்படி சரியாக இருக்கலாம். ஆனால் இந்த முடிவானது பால்தாக்கரே ஒரு நிரபராதி என்று அறிவிக்கின்ற இறுதித் தீர்ப்பு அல்ல.

1993ல் மும்பையில் ஹிந்து - முஸ்லிம் கலவரங்களைத் தூண்டும் விதமாகத் தமது கட்சிப்




பத்திரிகையில் பலமுறை எழுதினார் தாக்கரே என்பதுதான் குற்றச்சாட்டு. இக் குற்றச்சாட்டுக்கு அப்பாற்பட்டும் கூட தாக்கரேயின் முஸ்லிம் விரோதப் பேச்சும் போக்கும் உலகப் பிரசித்தம்தான். பாகிஸ்தானுடன் கிரிக்கெட் ஆடக்கூடாது என்பதற்காக பிட்சையே தோண்டிப் போட்ட 'வீர'த் தொண்டர்கள் இவருக்கு உண்டு. மும்பைக் கலவரங்கள் குறித்து விசாரணை நடத்திய ஸ்ரீ கிருஷ்ணா கமிஷனும் தாக்கரே மற்றும் சிவசேனாவுக்குக் கலவரங்களில் முக்கியப் பங்கு இருப்பதைக் குறிப்பிட்டிருக்கிறது. இத்தனைக்கிடையில் காலக்கெடு கடந்து விட்டது என்று காரணம் காட்டி, தாக்கரே பேரிலான வழக்கை நீதிமன்றம் ஏற்க மறுத்திருப்பது சட்டப்படி சரியாக இருக்கலாம். ஆனால் நீதி நிலைத்ததாகாது. வழக்கைச் சமர்ப்பித்தபோதே காலக்கெடு கடந்து போனதற்கான காரணத்தையும் அரசுத் தரப்பு வக்கீல்கள் முறையாகச் சுட்டிக்காட்டி யிருக்கலாம். அதைச் செய்யத் தவறியதால் சட்டம் ஒரு கழுதை என்பது மீண்டும் மெய்ப்படு கிறது. மஹாராஷ்டிராவில் பி.ஜே.பி. - சிவசேனா ஆட்சி நடந்த காலகட்டத்தில், மும்பைக் கலவரம் தொடர்பான பல்லாயிரம் வழக்குகள் வாபஸ் பெறப்பட்டதையும் வேறு பல வழக்குகள் வேண்டுமென்றே தாமதப்படுத்தப்பட்டதையும் எடுத்துச் சொல்லி, பிரச்னையின் வீச்சையும் முக்கியத்துவத்தையும் கருதி விதிவிலக்காக இவ்வழக்கை மேற்கொள்ளும்படி கோரியிருக்க வேண்டும். ஆனால் அப்படியின்றி, அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக மஹாராஷ்டிர அரசு இந்த வழக்கைக் கையாண்டிருக்கிறது. அந்த அவசரத்தைப் பார்க்கையில், கலவரங்களில் நடந்த அநீதிகள் வெளிச்சத்துக்கு வந்து, தண்டிக்கப்பட வேண்டும் என்பதைக் காட்டிலும் பால்தாக்கரே கைதாக வேண்டும் என்பதுதான் முக்கிய நோக்கமாக இருந்திருப்பது புரிகிறது.

ஒரு காலத்தில் சகாவாயிருந்து இப்போது எதிர்க்கட்சியிலிருக்கும் சகன் புஜ்பல் பால் தாக்கரே மீது கொண்டுள்ள தனிப்பட்ட பகைமையின் வெளிப்பாடாகவே எல்லாம் நடந்துள்ளதாகத் தோன்றுகிறது.




"வழக்கு எப்படிப் போனால் என்ன, தாக்கரேயைக் கைது செய்து காண்பித்து விட்டோமே! பம்பாய் பற்றி எரிந்து விடவில்லையே!" என்று வெளிப்படையாகவே கொக்கரிக்கிறார், புஜ்பல்! இத்தனைக்கும், தாம் கைதானால் மும்பையில் கலவரம் வெடிக்கும் என்று சரியாக அனுமானித்து, தாக்கரே தாமே நீதிமன்றத்துக்கு வர ஒப்புக் கொண்டு, அரசுக்குச் சங்கடத்தைத் தவிர்த்திருக்கிறார்.

மேயர் இல்லத்தில் அவர் ஒப்புக்குக் கைதாகி நீதிமன்றம் சென்று வரும் வரை நடுநடுங்கி மும்பை கடைக்காரர்கள் கடை அடைத்து விட்டனர். வீதிகளில் நடமாட்டம் இல்லை; டெலிபோன் லைன்கள் எல்லாம் படுத்து விட்டன! பங்கு மார்க்கெட் கூட பாதிப்புக்குள்ளாகியிருக்கிறது!

சிவசேனா தொண்டர்கள் அமைதி காத்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு முன்னுதாரணமாகத் திகழ வேண்டிய மஹாராஷ்டிரா சட்டசபை சிவசேனா எம்.எல்.ஏக்களோ நாற்காலிகளை நொறுக்கி மைக்குகளை உடைத்து, கை வரிசையைக் காட்டி கேவலப்பட்டுப் போனார்கள்.

வன்முறையில் ஈடுபட்ட எம்.எல்.ஏக்கள் அவையிலிருந்து தாற்காலிகமாக இடைநீக்கம் செய்யப்பட்டுள்ளனர்.

மஹாராஷ்டிராவில் ஆளும் காங்கிரஸ் கூட்டணி, பி.ஜே.பி. - சிவசேனாவுக்குச் சங்கடம் ஏற்படுத்திவிட்டதாக மகிழலாம். ஆனால் மத்திய அரசை பலவீனப்படுத்துவதன் மூலம் ஒரு மாநில அரசு தன்னையும் பலவீனப்படுத்திக் கொள்கிறது என்பதை மறந்துவிடலாகாது.

1993ல் நடந்த கலவரங்களுக்குக் காரணமானவர்கள் தண்டிக்கப்பட வேண்டுமானால் அரசியல் நோக்கைத் தூக்கியெறிந்து விட்டு நடுநிலையுடன் மஹாராஷ்டிரா அரசு சுறுசுறுப்பாக இயங்க வேண்டும். பாதிக்கப்பட்ட மக்கள் எதிர்பார்ப்பது நீதி - நியாயத்தைத்தானே தவிர அரசியல் நாடகங்களை அல்ல!

# ஆங்கிலமே, அருகில் வா!




ஆங்கிலமே அருகில் வா தொடர் ரொம்ப அருமையாத்தான் இருக்கு. ஆனா... நீங்க போன வாரம் எழுதியிருந்த விஷயம்தான் கொஞ்சம் குழப்பமா இருக்கு.

Putன்னா 'வை'

ஆனா 'put up'ன்னா 'தங்கு'ன்னு சொல் றீங்களே, அது எப்படி ஸார்? upன்னா 'மேலே'ன்னுதானே அர்த்தம். குழப் பமா இருக்கே' என்று எழுதியிருக் கிறார் சென்னை அடையாரி லிருந்து சுகுமாரன் என்ற வாசகர்.

இது போல குழப்பம் உங்கள்ள சில பேருக்கும் இருக்கலாம்.

Putன்னா 'வை'ன்னுதான் அர்த் தம். ஆனா இந்த வார்த்தையோட up, on, down, off, out இது போன்ற வார்த்தைகள் சேரும்போது 'put' என்ற வார்த்தையின் அர்த்தம் மாறும்.

Put up, Put on... போன்ற வார்த்தைகளுக்கு phrase அதாவது 'phrasal verbs'ன்னு பேரு. Put upன்னா தாற்காலிகமா ஒரு இடத்துல தங்கு'ன்னு அர்த்தம்.




**வி. ராஜகோபாலன்**

இதைத்தான் phrase ன்னு சொல்றோம். phraseன்னா என்னன்னு கேட்கறீங்களா?

தமிழ்ல இதை மரபுச் சொற் றொடர்னு சொல்றதுண்டு. என்ன... இன்னும் குழப்பம் தீரலையா?

சரி, ஒரு உதாரணம் சொல்றேன். கவனியுங்க. தமிழ்ல 'மாலை'ங் கற வார்த்தையை எடுத்துக்கலாம். இதோட அர்த்தம் என்ன? என்ன ஸார்... இதுகூட






'Put on the white shirt' அந்த வெள்ளை (கலர்) சட்டையைப் போட்டுக்கொள் அதாவது அணிந்துகொள் என்பது இதன் அர்த்தம்.

'கல்யாணம் ஆனவுடன் அவன் நல்லா குண்டாயிட்டான், ஆளு தடியாயிட்டான்'னு நாம சொல்றதுண்டு. இதைக் கூட 'put on weight'ன்னு சொல்லலாம். He has put on weight. அவன் நல்ல குண்டாயிட்டான். அதாவது அவனோட எடை கூடியிருக்குங்கறது இதன் அர்த்தம்.

எங்களுக்குத் தெரியாதா? பலவிதமான பூக்களைக் கொண்டு கட்டியதைத்தான் 'மாலை' என்று சொல்வோம் என்கிறீர்களா? சரிதான், ஆனால் சாயங்காலம் என்பதையும் 'மாலை' என்றுதானே சொல்கிறோம்?

சரி, 'மாலை' என்றால் அது கழுத்தில் போடும் மாலையா அல்லது சாயங்காலமா?

வித்தியாசத்தைக் கண்டுபிடிக்கறது கொஞ்சம் கஷ்டம்தான். ஆனா... இந்த 'மாலை'க்குப் பக்கத்துல ஒரே ஒரு வார்த்தையைச் சேர்த்தா ஈஸியா தெரிஞ்சுக்கலாம்.

அவன் மாலையுடன் வந்தான்.

அவன் மாலையில் வந்தான்.

பார்த்தீங்களா? 'உடன்' என்ற வார்த்தையும், 'இல்'ங்கற வார்த்தையும் 'மாலை'ங்கற வார்த்தையோட அர்த்தத்தை எப்படி மாத்திடுச்சு!

இதே போலத்தாங்க put, take, keepங்கற சில இங்கிலீஷ் வார்த்தைகளோட in, at, out, off, upங்கற வார்த்தைங்க சேர்ந்தா அதனோட அர்த்தங்கள் மாறும்.

இப்போ ஓரளவு குழப்பம் தீர்ந்திருக்கும்னு நெனக்கறேன். சரி, 'put'ங்கற வார்த்தையோட up, on, out, offங்கற சொற்களைச் சேர்த்து அதோட அர்த்தம் எப்படியெல்லாம் மாறுதுன்னு பார்க்கலாமா?

'Put up'ன்னா stayன்னு அர்த்தம்னு பார்த்தோம் இல்லியா?

சரி, put up the file immediatelyன்னா fileஐ சரி பார்த்து உடனே submit (சமர்ப்பி) பண்ணுங் கன்னு அர்த்தம்.

பொறுத்துக் கொள், சகித்துக் கொள் என்பதைத் தெரிவிக்க 'put up with' என்ற சொற்றொடரை use பண்ணலாம். I can't put up with this insult (ஐ கான்ட் புட் அப் வித் திஸ் இன்ஸல்ட்).

என்னால் இந்த அவமதிப்பைத் தாங்கிக் கொள்ள (சகித்துக் கொள்ள) முடியாது.

Put on என்றால் அணிந்து கொள் என்று அர்த்தம்.

சரி, அடுத்ததா 'put out'ங்கற வார்த்தைக்கு என்ன அர்த்தம்னு பார்க்கலாம்.

எரிந்து கொண்டிருப்பதை 'அணை' என்பதை இங்கிலீஷில் 'extinguish'ன்னு சொல்றதுண்டு.

ஆனா இந்த வார்த்தைக்குப் பதிலா 'put out'ங்கற வார்த்தையை யூஸ் பண்றது வழக்கமாயிடுச்சு.

Putout the fireன்னா நெருப்பை அணை'ன்னு அர்த்தம்.

'மெழுகுவர்த்தியை அணை'ன்னு சொல்லும்போது 'Blow out the candle 'ன்னு சொல்லலாம்.

இதையே put out the candleன்னும் சொல்லலாம். Put out the cigaretteன்னா 'சிகரெட்டை அணை'ன்னு அர்த்தம்.

சரி, ' put down 'ன்னா என்ன தெரியுமா? அவசரப்பட்டு 'putன்னா'ன்னு வார்த்தைங்கள தனித்தனியா பிரிச்சு சொல்லிடாதீங்க.

கலகம், கிளர்ச்சி போன்றவற்றை போலீஸ் அல்லது இராணுவத்தின் உதவியால் அடக்குகிறோம் அல்லவா? இதைத்தான் 'putdown' என்கிறோம்.

The revolt was putdown. கலகம் அடக்கப்பட்டது. Revolt (ரிவோல்ட்) என்றால் கலகம். Military police were called in to put down the revolt.

கலகத்தை அடக்க இராணுவ போலீஸ் வரவழைக்கப்பட்டது. 'riot' என்றாலும் கலகம் அல்லது கிளர்ச்சி என்றுதான் அர்த்தம்.

'Put up the file' ன்னா என்ன அர்த்தம்?

File ஐ சரி பார்த்து submit (சமர்ப்பி) பண்ணுங்கன்னு அர்த்தம்.

சரி, மத்த விஷயங்களை அடுத்த வாரம் பார்க்கலாம்.

(தொடரும்)



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை-63. Tel & FAX: 2376129
E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ | 1000/- |
| • மதிய உணவு. | ரூ | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ | 750/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 9,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 2,00,000/- |

## -: விவேகானந்தர் தேசிய இயக்கம் :-



ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின் சார்பில் "விவேகானந்தர் தேசிய இயக்கம்" என்ற அமைப்பு கிராமபுறத்தில் உள்ள ஏழை மாணவ , மாணவியர்களின் கல்வி மற்றும் ஆன்மீக முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப் பட்டுள்ளது.
இதன் மூலம் 51 கிராமங்களில் சுமார் 2700 ஏழை மாணவ, மாணவியர்களுக்கு மாலை நேரத்தில் இலவச சிறப்புக் கல்வியும், (டியூஷன்) ஆன்மீக பயிற்சியும் அளிக்கப்படுகிறது. இந்த மேலான தொண்டுகள் சிறப்பாக நடைபெற தங்களின் அன்பையும், உதவியையும் நாடுகிறோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஒரு சென்டருக்கு ஒரு மாதத்தின் பராமரிப்பு செலவு (பௌர்ணமியன்று ஒரு வேளை சிறப்பு உணவு செலவு உட்பட) | ரூ | 1, 500/- |
| 2. | 2700 மாணவர்களுக்கு பௌர்ணமி நாளன்று உணவு வழங்க (அன்று கூட்டு வழிபாடு, பக்தி பாடல்கள் பிரார்த்தனை அனைத்து டியூஷன் சென்டரில் நடத்தப்படும்) | ரூ | 27, 000/- |
| 3. | ஒரு மாதத்திற்கு 51 சென்டர்களின் பராமரிப்பு செலவு பௌர்ணமி பூஜை உட்பட | ரூ | 76, 500/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ. 5000/- பெறும் முதல் பரிசு கதை.

# வெ. ஜானகி

மதியத் தூக்கம் கலைந்து எழுந்தபோது கேசவப் பெருமாளுக்கு மிளகாய் பஜ்ஜி தின்ன வேண்டுமென்ற அவா அடக்க முடியாமல் ஏற்பட்டது.

இப்படிப்பட்ட அல்ப சபலங்கள் அவருக்கு வழக்கமாக எழுவதில்லை. எப்படி எழும்? இரண்டு பெண்களையும், அவர்களோடு கூட பிராவிடன்ட் ஃபண்ட் பணத்தையும் தாரை வார்த்துக் கொடுத்துவிட்ட ஓய்வு பெற்ற கணக்கு வாத்தியாருக்கு சபலங்கள் ஒரு கேடா?

அது சரி. ஆனால் இதெல்லாம் நாவுக்கு எங்கே தெரிகிறது? அது பாட்டுக்கு ஏங்கித் தொலைத்தது.

பொறுக்க மாட்டாமல் எழுந்து வேறுபுறம் படுத்திருந்த மனைவியிடம் சென்று சற்று இறைஞ்சலாக, "ஜெயா, டிபனுக்கு மிளகாய் பஜ்ஜி போடறியா?" என்றார்.

ஓரிரு கணங்கள் சென்றபின் கண்களைத் திறந்து அவரை மௌனமாகப் பார்த்தாள்.

"நான் போய் மிளகாய் வாங்கிட்டு வரேன்" என்றார் மேலும் தணிவாக.

லேசாகத் தலையசைத்துவிட்டு ஜெயா மறுபடி தூங்கிப் போனாள்.

கேசவன் சட்டையையெடுத்து மாட்டிக் கொண்டு அதன் பையில் துழாவினார். ஒரு சுமாரான பத்து ரூபாய் நோட்டும், கந்தலான ஐந்து ரூபாய்த் தாளும் கிடைத்தன. மனம் நிம்மதியாகிவிட்டது. இது போதும். தலையை வாரிக் கொண்டு கடைத் தெருவை நோக்கிக் கிளம்பினார்.

வாசல் திண்ணையில் செங்குந்துக் கிழவர் உட்கார்ந்திருந்தார். அவரிடம் மாட்டாமல் வெளியேற வேண்டுமே என்று பூனையடி யெடுத்து வைக்கையிலேயே, "யாரு? கேசவனா? எங்க கிளம்பிட்ட?" என்றார்.

"கடைத்தெரு வரைக்கும்" என்றார் கேசவன்.

"அடடே! எனக்கு கரீம்பாய் கடையி லிருந்து பொடி வேணும். ஒரு பொட்டலம் வாங்கிட்டு வறியா?" என்றார்.

மாட்டேனென்றா சொல்ல முடியும்? ஒரு மாத வாடகை பாக்கியாக்கும்! கேசவன் சரி யென்று தலையசைத்துவிட்டு அகன்றார்.

வடபுத்தூரின் கடைத் தெருவைப் பாரதத்தில் பெருகியிருக்கும் வியாபார அலை சற்றும் நனைத்ததாகத் தெரியவில்லை. அத்தியாவசியத் தேவைகளுக்கென ஒரு டஜன் கடைகள். அவற்றைத் தாண்டி, சிவன் கோவிலுக்கு முன்னே காய்கறி, பழம் பூ விற்கும் கூடைக்காரர்கள். அவ்வளவுதான். ஆனால் கடைத் தெருவில் வியாபாரம்தான் கம்மியே தவிர வம்பு அதிகம். சாதிக் கட்டுப்பாடுகளும், அரசியல் விசுவாசங்களும், தானிய, காய்கறி பேரங்களோடு கூடவே நிர்ணயிக்கப்பட்டு விடும். யாரைப் பார்த்தாலும் மாமன் மச்சான் உறவுமுறை சொல்லிப் பேச்சு. சண்டையாகட்டும் சம்பந்தமாகட்டும், பஞ்சாயத்து வரை போகவே வேண்டாம்- கடைத்தெருவி



லேயே பேசி, தீர்த்துவிடப்படும்.

கேசவப் பெருமாளுக்குக் கடைத்தெருவின் அரசியல் சற்று அச்சமளிக்கும் விஷயம். முக்காலும் தவிர்த்து விடுவார். இன்றுகூட, மிளகாய் மட்டும் வாங்குவதாக இருந்தால் வாய்க்கால் கரையோரமாக நடந்து வந்து கூடைக்காரர்களிடம் வாங்கிக் கொண்டு திரும்பியிருப்பார். கரீம் பாய் கடையில் பொடி வாங்கும் பொருட்டே பஜாருக்குள் நுழைய வேண்டியதாயிற்று.

எதிர்பார்த்தது போலவே, தேவேந்திரன் அத்தான், "எலே கேசவா!" என்று கடைத் தெரு அதிரக் கூப்பிட்டார்.

"எங்கேடா, ஆளையே காணோம்?" என்ற தேவேந்திரன், அவருடைய இரும்பு சாமான் கடையிலிருந்து வெளிவந்து, குரல் தாழ்த்தி, "ஏண்டா போன மாசம் சங்கக் கூட்டத்துக்கு வல்லே?" என்றார்.

"மதுரையில் பெண் வீட்டுக்குப் போயிருந்தேன் அத்தான்."

இத்துடன் விட்டால் தேவலை. விடுபவரா தேவேந்திரப் பெருமாள்?

"தவறாம சங்க கூட்டத்துக்கு வரணும்டா கேசவா. நம்ப சாதி சனத்தை வேற எப்படிப் பாக்கறது?"

கேசவன் தன் வயதுக்குப் பொருந்தாத அசட்டுச் சிரிப்பொன்றை உதிர்த்து விட்டு அங்கிருந்து அகன்றார்.

**நா**லு கடை தள்ளி கரீம் பாயின் ஜனதா ஸ்டோர்ஸில்தான் நின்றார். ஐந்து ரூபாய் நோட்டை விரல் நுனிகளால் பிடித்துக் கல்லாப் பெட்டியில் போட்ட பாய், தமாஷாக, "என்ன கேசவன் சார், நீங்களும் பொடி போட ஆரம்பிச்சுட்டீங்களா?" என்றார்.

"இல்ல பாய். இது இன்னொருத்தருக்கு. அதுசரி, வீட்டிலே எல்லாரும் சுகம்தானே?"

"சௌக்கியந்தான்" என்று புன்னகைத்த பாய் பொடி மட்டையையும், பாக்கிச் சில்லறையையும் கேசவனிடம் கொடுத்தபடி, "ஒண்ணு கேக்கணும் கேசவன் சார்" என்றார்.

"என்ன?"

"நீங்களும் எத்தனையோ பிள்ளைங்களுக்கு நல்லதைச் சொல்லிக் குடுத்திருக்கீங்க. அவங்க வளர்ந்து, புத்தி கெட்டு, சாதி மதம்னு ஒருத்தரையொருத்தர் ஏன் வெட்டிக்கிறாங்கன்னு யோசிச்சிருக்கீங்களா?"

கேசவன் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவில்லை. என்ன பதில் சொல்வது என்று பிடிபடாததால், "எதுக்குக் கேக்குறீங்க?" என்றார் சன்னமான குரலில்.

"சொல்றேன். போன வாரம் வாடிப்பட்டி போக வேண்டியிருந்தது. எப்ப? பத்து தலித்துகளை வெட்டி சாய்ச்சாங்களே? அப்ப. என் போறாத காலம், சரியா அது நடந்த சமயம் நான் பஸ் ஸ்டாண்டிலேயிருந்தேன். பாண்டியோட ஆளுங்க என் கண் முன்னாலேயே அந்தப் பசங்கள பஸ்ஸிலேருந்து இழுத்துப் போட்டு வெட்டினாங்க. கசாப்புக் கடை மாதிரி ஆயிடுச்சி பஸ் ஸ்டாண்டு. எதுக்கு இதைச் சொல்றேன்னா, பாண்டிக்கும் உங்க அத்தான் தேவேந்திரனுக்கும் எவ்வளவு நெருக்கம்னு எல்லாருக்கும் தெரியும். நீங்க ஏன் உங்க அத்தான்கிட்ட பேசி பாண்டிய இதெல்லாம் நிறுத்தச் சொல்லக் கூடாது? இதோ இதோன்னு தேர்தல் வேற பயமுறுத்துது. அதுக்குன்னு வேற தனியா வன்முறை. இந்தத் தடவை தலித்களும்

சும்மாயிருக்க மாட்டாங்க... என்ன நான் சொல்றது?"

கேசவப் பெருமாளுக்கு பஜ்ஜிக்கு ஆசைப் பட்ட தன் நாக்கை வெட்டிக் கொள்ள வேண்டும் போலிருந்தது. மிளகாயைத் தேடி கடைத் தெருவுக்கும் வந்திருக்க வேண்டாம், கரீம் பாயிடம் மாட்டிக் கொண்டிருக்கவும் வேண்டாம். கரீம் பாயுடைய துர்பாக்கியம் அவர் வாடிப் பட்டி வன்முறையினிடையில் மாட்டிக் கொண்டது. அதை, சம்பந்தமேயில்லாத தன்மேல் திணிப்பானேன்? கேசவன் பொடி மட்டையை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு, "இந்தக் காலம் அப்படி. நாம என்ன செய்ய?" என்று மொணமொணத்து விட்டு நடையைக் கட்டினார்.

இதனால் கறிகாய்க் கடையை நோக்கி நடக்கையில் தலையை நிமிரக் கூட இல்லை.



"எங்க ஆபீஸ்ல கொஞ்ச காலமா லஞ்ச வசூல் ரொம்ப டல்லாயிடுச்சு."

"அடடா, பிறகு என்ன செய்தீங்க?"

"ஒரு வருஷ மாமூலை மொத்தமா தர்றவங்களுக்கு ஒருமாத லஞ்சம் தள்ளுபடினு அறிவிச்சிருக்கோம்!"

– மிஸ்டர் எக்ஸ்

மிளகாயை வாங்கிக் கொண்டு வீடு போய்ச் சேர்ந்தால் போதும் போலிருந்தது. மிளகாய் சீஸனானதால் இரண்டு மூன்று கூடைக்காரர்கள் அந்த விற்பனையிலேயே ஈடுபட்டிருந்தனர். ஒருவன் கேசவனுக்குத் தெரிந்தவன்.

"அடே, மாரி! நீயா?" என்றார் கேசவன். மாரி வழக்கமாக விநாயகம் தெருவில் கீரையிலிருந்து கரும்புவரை கூவிக் கூவி விற்பவன். கொஞ்ச நாளாகத் தென்படவில்லை என்பது இப்போது உறைத்தது. பச்சைப்பசேலென்று, குவிந்த குடைகள் போல் நல்ல நீளமும் வீச்சுமாக இருந்தன மாரியின் மிளகாய்கள்.

"என்னடா? இந்த வியாபாரத்தையும் விட்டு வக்கலியா? என்ன விலை?" என்றார் கேசவன், சிரித்தபடி.

மாரி பதிலுக்குச் சிரிக்கவில்லை. "கிலோ இருபது ரூபாய் சாமி" என்றான் கறாராக. என்ன ஆயிற்று இந்தப் பயலுக்கு?

சட்டென்று கரீம்பாய் வாடிப்பட்டியைப் பற்றிக் கூறியது நினைவுக்கு வந்தது. ஒரு வேளை தானும் மாரியும் இப்போது எதிரிகளோ? நினைப்பே அபத்தமாயிருந்தது. பழக்க தோஷத்தால் பேரம் பேசாமலும் வாங்க மனம் வரவில்லை.

"என்ன மாரி இது? மிளகாய் சல்லிசாக் கிடைக்கிற காலமில்லையா? இந்த விலை சொல்ற? நம்ம செங்குந்து அய்யா கூட கிலோ பத்து ரூவான்னு மதுரையிலிருந்து வாங்கி வந்தாரே?"

"அப்ப மருதையிலேயே போய் வாங்கிக்க வேண்டியதுதானே?"

எகத்தாளமாக வந்த குரல் மாரியின் அருகில் அமர்ந்திருந்த இளைஞனுடையது. கட்டுமஸ்தாக, மீசையும் துடுக்குமாக இருந்தான். சாதாரணமாக, அவன் இப்படிப் பேசியதற்கு மாரி அவனைக் கண்டித்திருப்பான். இன்று அப்படிச் செய்யவில்லை.

இனிப் பேசுவதில் பயனில்லையென்று உணர்ந்த கேசவன், "சரி. அரைக்கிலோ போடு" என்றபடி தன் துணிப்பையின் வாயைப் பிரித்துப் பிடிக்க, மாரி அரைக் கிலோ மிளகாயை நிறுத்தி அதில் கொட்டும் சமயம், "கேசவா! எங்கே இந்தப் பக்கம்?" என்ற உரத்த கூவலுடன் முதுகில் ஒரு அடி விழுந்தது. திரும்பிப் பார்த்தால் கோவிந்தப் பெருமாள். ஜெயாவின் அத்தை மகன், பஜாரில் பாத்திரக் கடை வைத்துக் கொழிப்பவன். இவ்விரு காரணங்களுக்காகவே கேசவனுக்கு அவனைப் பிடிக்காது. போதாததற்கு, அநியாயத்துக்கு வாய்க் கொழுப்பு.

"அய்யோ, இவனா?" என்று மனசு அலறினாலும், வலிய வரவழைத்துக் கொண்ட புன்னகையுடன், "சௌக்கியமா கோவிந்தா?" என்று கேட்டு வைத்தார்.

"என் சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்? நீ சொல்லு. ஜெயா எப்படி இருக்கு? கலா, மாலா சௌக்கியமா? ஏகத்துக்கு இளைச்சிட்டியே?" என்றெல்லாம் விசாரித்து முடித்து விட்டு, முத்தாய்ப்பாக, "என்ன விலை, மிளகாய்?" என்றான்.

இதையொன்றும் முக்கியமாக அவன் கேட்கவில்லை. சில பேர் ஏதோ கேட்டு வைக்க வேண்டுமென்றே கேட்பார்கள். அதே மாதிரிதான் கேட்டான். கேசவனும் சாதாரணமாகத்தான், "ஒண்ணும் சல்லிசாயில்ல கோவிந்தா. கிலோ இருபது ரூவா" என்றார்.

பிறகுதான் கோவிந்தன், "என்னது! அநியாயமாயிருக்கே?" என்று எகிற ஆரம்பித்தான். அதோடு விட்டானா? "நேத்திக்குக் கூட என் பொஞ்சாதி கிலோ பத்து ரூவான்னு வாங்கி மசாலாக் கறி பண்ணாளே? எட்டு ரூபா பத்து ரூபா கிலோன்னு சிரிப்பா சிரிக்குது- நீ இருவது ரூவா குடுக்கப் போறியா? அறிவிருக்கா உனக்கு? ஏலே மாரி! ஏமாந்தவன் அகப்பட்டா உலக்கை விலைக்கு ஆணிய விப்பியே!" என்றான்.

சாதாரணமாக இதைக் கூட மாரி பொருட்படுத்தியிருக்க மாட்டான். ஆனால் இன்று எல்லாமே வேறாகிவிட்டிருந்தது போலும். கோபத்துடன், "மிளகாய் வேண்டாம்னா திருப்பிடுங்க சாமி. இருவது ரூபாய்க்குக் குறையாது" என்று கூறி மாரி கேசவனின் பையைப் பிடுங்க எத்தனிக்க, கோவிந்தன் குறுக்கே புகுந்து பையையிழுத்து கேசவனின் கையில் திணித்து, "அதெப்படி? வாங்கினது வாங்கினது தான்! கேசவா, அரைக்கிலோவுக்கு அஞ்சு ரூபா குடு. அதான் நியாயவிலை" என்றான்.

தர்மசங்கடமாகியது கேசவப்பெருமாளுக்கு. பையிலிருப்பதோ பத்து ரூபாய்தான். அதைக் கொடுத்தால் மாரி நிச்சயம் சில்லறை தரமாட்டான். சில்லறை கொடுக்காவிட்டால் கோவிந்தன் விடமாட்டான். பரிதாபமான முகபாவத்துடன் பத்து ரூபாய்த் தாளை வெளியிலெடுக்கையில், அதைப் பார்த்த கோவிந்தன், "என்ன கேசவா, சில்லறை இல்லியா? நான் தரேன்" என்று தன் பையிலிருந்து ஒரு ஐந்து ரூபாய் நாணயத்தை எடுத்து மாரியிடம் கொடுத்தான்.

"ஏன் கோவிந்தா நான் வாங்கின மிளகாய்க்கு நீ பணம் குடுக்கற? எனக்குக் கஷ்டமா இருக்கில்ல?" என்று கேசவன் கூற,

"இதெல்லாம் பெரிய கணக்கா? போ, போ!" என்று கோவிந்தன் அவரைத் தள்ளிவிட்டான்.

கேசவன் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி, சங்கடத்துடன் நகர்ந்தார். அவர் முதுகுக்குப் பின்னே மாரியும் அந்த இளைஞனும் இரைவது கேட்டது. "ஏஞ்சாமி இப்ப சந்தோசந் தானே? ஏழை வாயிலேருந்து அஞ்சு ரூவாயைத் தட்டிப் பறிச்சுட்டீங்கல்ல?"

பதிலுக்கு கோவிந்தனும், "என்னடா, திமிரா? யார்ட்ட பேசறோம்னு நெனவிருக்கா? உங்களச் சொல்லிப் புண்ணியமில்லடா, உங்களுக்கெல்லாம் ஏத்தி வச்சிருக்காங்களே, அவங்களச் சொல்லணும்! நாய்களா!" என்று கத்துவதும் கேட்டது.

சஞ்சலம் மேலோங்க, கேசவன் வேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றார்.

**கா**ல்வாய்ப் பக்கமாகவே ஓட்டமும் நடையுமாக வீடு வந்து சேர்ந்த பிறகு கூட அந்தப் படபடப்பு அடங்கவில்லை. பதற்றத்தில் பொடி மட்டையை செங்குந்துவிடம் கொடுக்க மறந்துவிட, கிழவர் விடாமல் தொடர்ந்து வந்து, "பொடி வாங்கிட்டு வரலியா?" என்று கேட்டு வாங்கிப் போனார். "என்ன இப்படி மூச்சிரைக்குது உனக்கு? யாராவது துரத்திட்டு வராங்களா என்ன?" என்று கேலி வேறு செய்தார்.

ஜெயா மிளகாயை வாங்கி அலம்பி, பிளந்து, மசாலா அடைத்து, மாவில் தோய்த்து எண்ணெயில் வறுத்தெடுக்கும் நேரத்துக்குத் தான் கேசவன் கொஞ்சம் சாந்தமானார்.

ஜெயா ஒரு தட்டு நிறைய சூடாக வைத்து இவர் பக்கம் தள்ளினாள். அடேயப்பா! என்ன ருசி! முறுமுறுவென்று மேல் தோலும், மெத்து மெத்தென்று உள்ளே மிளகாயும்... வாயில் போட்டு மெல்ல மெல்ல, மெய்மறந்தார் கேசவன். கடைத்தெருவில் நடந்த கூத்துகூட இந்தச் சுவையின் முன் காணாமல் போனது.

கடைசி பஜ்ஜியை விண்டு வாயில் போடும் போதுதான் செங்குந்து ஓடி வந்தார்.

"கேசவா! பஜாரில் ஒரே கலாட்டாவாம்! என் மருமான் வந்து சொல்லிட்டு ஓடறான்!" என்றார் மூச்சிரைக்க.

திக்கென்றது கேசவனுக்கு. "என்னவாம்?"

"நம்ப கறிகாய்க்காரன் மாரியில்ல? அவனுக்கும் உன் உறவுக்காரன் கோவிந்தனுக்கும் வாய்த் தகராறு முத்தி, கோவிந்தன யாரோ

"சார், ரவுடிங்கள் கூட ரொம்ப பிரெண்ட்லியா பழகாதீங்கன்னு சொன்னேன்ல? கேட்டீங்களா?"

"ஏன்யா என்னாச்சி?"

"குற்றாலம் டூர் போறானாம்... ரெண்டு நாளைக்கு ஜீப் கேட்கறான் சார்!"

— திட்டை ஜெ. நஸீர்கான்



வெட்டிட்டாங்களாம்!"

"அய்யோ!" ஜெயா அலற ஆரம்பித்தாள்.

"மாரியை உருட்டுக்கட்டையால யாரோ அடிச்சிருக்காங்க. உடனே செய்தி பரவி சேரியிலேருந்து கம்பு, கத்தியைத் தூக்கிக்கிட்டு கும்பல் கும்பலா ஓடி வராங்களாம்! மருதை பல்லைக் கொளுத்திட்டாங்களாம். என்ன, போ! போன வாரம் வாடிப்பட்டி, இந்த வாரம் நம்மூரு. கூத்தாயில்லயிருக்குது! ஏதோ மிளகாய் வாங்குற தகராறில் ஆரம்பிச்சதாமில்ல?" என்று பிரலாபித்துக் கொண்டே போன செங்குந்து, சட்டென்று நிறுத்தி, கேசவன் கையில் பிடித்திருந்த பஜ்ஜியைப் பார்த்தார். பிறகு நிமிர்ந்து அவரைப் பார்த்தார். இருவர் பார்வையிலும் இப்போது புரிதலும், பயமும் பனிச்சிட்டன.

கேசவன் வாயில் போட்ட பஜ்ஜியை மெல்ல மறந்தார். வயிற்றைப் புரட்டிக் கொண்டு வந்தது. ❍

# பொன்னியின் செல்வன்



## பூர்வகதை

இன்றைக்குச் சுமார் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு விஜயாலய சோழன் இரண்டாவது சோழ சாம்ராஜ் யத்துக்கு அடிகோலினான். சோழ நாட்டின் சேனா வீரர்கள் நாலு திசைகளிலும் படை எடுத்துச் சென்று வெற்றிக்கு மேல் வெற்றி அடைந்து சோழ சாம்ராஜ்யத்தின் எல்லையை விசாலப்படுத்தி வந்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தியின் காலத்தில் மதுரைப் பாண்டிய குலத்தின் கடைசிப் பிரதிநிதியான வீரபாண்டியன் கொல் லப்பட்டான். பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தில் முற்றிலும் ஐக்யம் அடைந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் மூத்த புதல்வனும் வீர பாண்டியனுடைய தலை கொண்டவனுமான ஆதித்த கரிகாலன் சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசனாக முடிசூட்டப் பெற்றான். வடதிசைச் சைன்யத்துக்கு மாதண்ட நாயகனாகிக் காஞ்சியைத் தன் இருப்பிடமாகக் கொண் டான். காஞ்சியில் புதிதாகப் பொன் மாளிகை கட்டித் தன் தந்தையை அங்கு வந்து இருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, பழைய வாணர் குடியில் பிறந்த வந்தியத்தேவன் என்னும் வீர னிடம் ஓலை கொடுத்து அனுப்பி னான்.

சுந்தர சோழ சக்கரவர்த்தி அரண் மனையில் பாரிச வாயுவினால் பீடிக் கப்பட்டு நடமாட்டமின்றிப் படுத்த படுக் கையாக இருந்தார். உடல் நோயைக் காட்டிலும் அதிகமாக மன நோயினால் சுந்தர சோழர் பீடிக்கப்பட்டிருந்தார்.

இளம் பிராயத்தில் ஈழ நாட்டை அடுத்திருந்த ஒரு சிறு தீவில் சுந்தர சோழர் தங்கியிருக்க நேர்ந்தபோது கரையர் குலத்தைச் சேர்ந்த ஊமைப்

அமரர் கல்கி

பெண் ஒருத்தியினால் கரடியின் வாயிலிருந்து காப்பாற்றப்பட்டார். அந்தப் பெண்ணிடம் காதல் கொண்டார். சில காலம் இருவரும் அத்தீவில் ஆனந்த வாழ்க்கை நடத்தினார்கள்.

அப்போது சுந்தர சோழர் தாம் ஒரு காலத்தில் சக்கரவர்த்தியாகக் கூடும் என்று எதிர்பார்க்கவில்லை; அவர் பாட்டனாரான புகழ் பெற்ற பராந்தக சக்கரவர்த்தி அனுப்பிய வீரர்கள் அவரைத் தேடிப் பிடித்து அழைத்துப்போனார்கள்.

பராந்தக சக்கரவர்த்தியின் மூத்த புதல்வர் இராஜாதித்தர் தக்கோலத்தில் இரட்டை மண்டலச் சைன்யத்துடன் நடந்த பெரும் போரில் வீர சொர்க்கம் அடைந்தார். அவருக்கு அடுத்த கண்டராதித்தருக்கு அச்சமயம் மக்கள் இல்லை. அவருக்கு இளையவரான அரிஞ்சய சோழர் வைதும்பராயன் மகளாகிய அழகிற் சிறந்த கலியாணியை மணம் செய்துகொண்டிருந்தார். அவர்களுடைய ஏக புதல்வர் சுந்தர சோழர். பராந்தக சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் தமக்குப் பின் கண்டராதித்தரும் அவருக்குப் பிறகு சுந்தர சோழரும் சிம்மாதனம் ஏற வேண்டுமென்று திட்டமிட்டுக் காலமானார்.

சிவ நேசச் செல்வரான கண்டராதித்தர் பட்டத்துக்கு வந்த பிறகு செம்பியன் மாதேவி என்று சரித்திரப் புகழ் பெற்ற மழவரையர் மகளை மணந்தார். அவர்களுக்கு மதுராந்தகன் என்னும் மகன் பிறந்தான். ஆயினும் கண்டராதித்தருக்குப் பின்னர், அவருடைய சகோதரர் அரிஞ்சய சோழர் ஒரு வருஷம் ஆட்சி புரிந்து இறந்த பிறகு, சுந்தரசோழர் சிம்மாதனம் ஏறினார்.

பாட்டனாரின் விருப்பத்தின்படியும் மற்றும் இராஜ குடும்பத்தினர் அனைவருடைய சம்மதத்தின் பேரிலும் சுந்தர சோழ சக்கரவர்த்தியானார். அவர் திருக்கோவலூர் மலையமான் மகளை மணந்தார். அவர்களுக்கு இரு வீரப் புதல்வர்களும் ஓர் அருமை மகளும் பிறந்தார்கள். சுந்தர சோழரின் சாம்ராஜ்யம் விரிந்தது போலவே அவருடைய புகழும் நாலா திசையிலும் பரவியது. ஆனாலும் அவர் மனத்திற்குள் மதுராந்தகனுக்குப் பட்டமில்லாமல் செய்த குற்றம் உறுத்திக்கொண்டிருந்தது. நோய்வாய்ப்பட்டுப் படுத்த பிறகு அவருடைய மனசாட்சி அவரை அதிகமாகத் தொந்தரவு செய்தது. இது போதாது என்று, ஈழத் தீவைச் சேர்ந்த ஊமைப் பெண் ஆவி வடிவத்தில் வந்து அவரைத் துன்புறுத்தியதாக எண்ணிப் பிரமைகொண்டிருந்தார். இந்தக் காரணங்களினால் அவர் தமது குமாரர்களாகிய ஆதித்த கரிகாலனுக்கும் அருள்மொழிவர்மனுக்கும் சமாதானம் கூறி விட்டு மதுராந்தகனுக்கே தமக்குப் பின்னால் பட்டம் கட்டி விட்டால் நல்லது என்று கருதத் தொடங்கினார்.

விஜயாலய சோழர் காலத்திலிருந்து சோழ சாம்ராஜ்யத்தில் பழுவேட்டரையர் வம்சத்தினர் மிகச் செல்வாக்குப் பெற்று விளங்கி வந்தனர். சுந்தர சோழரின் காலத்தில் பெரிய பழுவேட்டரையர் சோழ நாட்டின் தனாதிகாரியாகவும் சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதியாகவும் பதவி வகித்து வந்தார்கள்.

அவர்களிடம் சுந்தர சோழர் பரிபூரண நம்பிக்கை வைத்திருந்தார். அவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக எதுவும் செய்ய அவர் விரும்பவில்லை.

பழுவேட்டரையர்களும், மற்றும் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும், முரட்டுச் சுபாவம் கொண்டவனாகிய ஆதித்த கரிகாலனை வெறுத்தார்கள்.

கரிகாலனுடைய சகோதரி குந்தவைப் பிராட்டியும் சகோதரன் அருள்மொழிவர்மனும் சோழ நாட்டு மக்களின் அன்பைப் பூரணமாகக் கவர்ந்திருந்தார்கள்.

இதனால் அவர்கள் பேரிலும் சிற்றரசர்கள் அசூயை கொண்டிருந்தார்கள். இக்காரணங்களினால் சிற்றரசர்கள் குலமுறைச் சட்டத்தை அனுசரித்து மதுராந்தகத் தேவனைச் சிம்மாதனத்தில் ஏற்ற விரும்பினார்கள். கொள்ளிடத்தின் வட கரையில் உள்ள கடம்பூர் சம்புவரையர் அரண்மனையில் அந்தரங்கக் கூட்டம் நடத்தி அவ்விதம் தீர்மானம்

வருவார். சொம்பு நிறைய ஆவி பறக்க நீர்க் காப்பி அருந்தி விட்டு, வேட்டியின் இடுப்புச் சுருட்டலிலிருந்து வியர்வை ஈரத்துடன் கசங்கிய நோட்டுக்களை எடுத்து எண்ணாமல் கொடுப்பார். அச்சமயம் நீலுப்பாட்டி அங்கிருந்தால், விவரிக்க முடியாததொரு அருவருப்புணர்வு அவள் கண்களிலிருந்து வழிந்து கன்னச் சுருக்கங்களில் படர்ந்து இறுகி, ஒரு விநாடி நின்று மறையும். நூற்றாண்டுக்கால வெறுப்புணர்வை அதற்குள் உமிழ்ந்து விடும் அவள் விழிகள்.

அப்பா, "என்ன முறைக்கறே?" என்பார், தானும் முறைத்தபடி.

"ஒண்ணுமில்லே" என்று வாசலுக்குப் போய், "கறிகாக்கார கட்டேல போறவன் வந்தானோ?" என்பாள் திசைகளை நோக்கி.




"எல்லாரும் ஒரு நாள் கட்டேலதான் போகப் போறோம். கறிகா ஒண்ணும் வாங்க வேண்டாம். இந்தா..." என்று பையை நீட்டுவார் அப்பா.

முட்டைக்கோஸ் அல்லது கேரட், தக்காளி, சிறு வெங்காயம் தொடங்கி கடுகு, மிளகு வரை சிறு சிறு பொட்டலங்களாக அதிலிருக்கும்.

நரம்புகள் அதிர, பரிதவிப்பின் அனைத்து சாத்தியங்களையும் இரு கையேந்தலில் வெளிப்படுத்திய வண்ணம் "பாவி! பாவி!" என்பாள் பாட்டி.

ஆனால் "நீ வாயை மூட மாட்டே?" என்கிற அவரது இரைச்சலில் சுவர்க் கோழிகளும் ஒடுங்கிப் பேச்சற்றுப் போகும்.

"கர்மா பண்ணி வெக்கறவன் அரிசியும் வாழைக்காயும் வாங்கிண்டு வந்து பார்த்திருக்கேன். இப்படி கேரட்டும் வெங்காயமும் கொண்டு வர்றதெல்லாம் ஆகாதுடா!" என்று கலங்குவாள் நீலுப்பாட்டி.

"இஷ்டமிருந்தா தின்னு. இல்லே, பட்டினி கெட."

உமாவுக்கு அப்பாவைப் புரிந்து கொள்வதில் சிரமமிருக்கவில்லை. வைதீகம் வயிற்றுப்பாடென்றான பின் வாழைக்காயின் இடத்தை வெங்காயம் பிடித்துக் கொள்வதில் வியப்பேதுமில்லை. ஆனால், மரபார்ந்த நம்பிக்கைகளை மட்டுமே சுவாசித்துக் கொண்டிருப்பவளின் உணர்வுகளை மதிக்க வேண்டுமென்பதில்லை – குறைந்தபட்சம் அலட்சியப் படுத்துவதை வெளிக்காட்டாமலாவதிருக்கலாமே அப்பா?

அக்னி தீர்த்தக் கரையில் நாளெல்லாம் உப்புக் காற்றுக் கசகசப்பில் குடை பிடித்துக் கொண்டு, "ஒரு சங்கல்பம் பண்ணிடலாமே?" என்று எதிர்ப்படுகிற யாத்ரீகர்களையெல்லாம் அழைத்து அமர வைத்து மந்திரம் சொல்லிச் சம்பாதிக்கிற சலிப்பில் அவர் முகம் நிரந்தரமானதொரு வறட்சியைப் பெற்றுவிட்டிருந்தது.

நீர்த்தார் காரிய மந்திரங்களை உருப் போட்டுச் சொல்லிச் சொல்லிப் பழகிய வாய், 'நானொரு மீனவனைக் காதலிக்கிறேன் அப்பா' என்றால், தனக்கெனவும் ஒருமுறை உச்சரிக்கத் தொடங்கிவிடக்கூடும்.

**ம**ணி ஆறரை ஆகிவிட்டிருக்கும் என்று நினைத்தாள். குழப்பமும் சலிப்புமாக எழுந்து நடக்கத் தொடங்கினாள். ராமகிருஷ்ணாபுரம் அருகே வந்தபோது நல்லவேளையாக பஸ் வந்து விட்டது. ஏறி அமர்ந்து கொண்டாள்.

பத்து நிமிடங்களில் வேர்க்கோடு மார்க்கெட் வந்து விட, சாலையெங்கும் ஜனக் கூட்டம் நிரம்பி, உரத்த குரலில் பேசிக் கொண்டிருக்கக் கண்டாள். கடற்படை ஜீப் ஒன்றும் அங்கே நிற்கக் கண்டவள், என்னவென்றறியத் தலையை வெளியே நீட்டினாள்.

கலவரமேற்படுத்தும்படியான அசம்பாவிதம் ஏதோ நிகழ்ந்திருக்கிறது என்பது மட்டும் புரிந்தது.

பஸ் புறப்பட்டு வேகமெடுக்கும் போது, கடலுக்குள் சென்ற இரு படகுகள் திரும்பவில்லை என்கிற செய்தியைக் கண்டக்டர் சொன்னார்.

வெளியே படர்ந்திருந்த அழுத்தமான இருள், திரண்டெழுந்து தன் மனத்துக்குள் பெரும் சுமையாக இறங்குவதாக உணர்ந்தாள் அவள்.

(தொடரும்)

1

# கிரிமினல்கள் ஜாக்கிரதை!

தடய அறிவியல் நிபுணர் டாக்டர் பி. சந்திரசேகரன்

• சந்திரசேகரன்

ஒரு முக்கியமான பணியில் என் கவனம் முழுவதையும் செலுத்திக் கொண்டிருந்தேன். அப்போது உதவியாளர் அறைக்குள் வந்து, 'சார் காஞ்சிபுரத்தில் இருந்து இன்ஸ்பெக்டர் ஒருவர் வந்திருக்கிறார்' என்று சொல்லிவிட்டுப் போனார். எங்கள் மாநில தடய அறிவியல் ஆய்வகத்திற்குப் போலீஸ்காரர்கள் அடிக்கடி வந்து போய்க் கொண்டுதான் இருப்பார்கள்.

பெல் அடித்து இன்ஸ்பெக்டரை வரச் சொன்னேன். உள்ளே வந்த இன்ஸ்பெக்டர், ''கொஞ்சம் பரிதாபமான கேஸ்தான் சார்'' என்று சொல்லத் தொடங்கினார்.

காஞ்சிபுரம் அருகிலிருந்த கிராமத்தைச் சேர்ந்த வயதான பெண்மணி ஒருவர் தன்னிடமிருந்த ஒரே சொத்தான கறவை மாட்டைச் சந்தையில் விற்று 800 ரூபாய் பணத்தை எடுத்துக்கொண்டு வீட்டிற்கு வந்திருக்கிறார். பணத்தை வடகம் வைத்திருந்த சிறிய பானையில் போட்டு மூடி வைத்துப் பத்திரப்படுத்தியிருக்கிறார். மறுநாள் காலையில் எழுந்து வடகப் பானையைப் பார்த்தால் பணத்தைக் காணோம்! அதிர்ந்து போய்விட்டார் அந்தப் பெண்மணி.

இதுதான் இன்ஸ்பெக்டர் சொன்ன கேஸ்!

''சரி இன்ஸ்பெக்டர், அந்தப் பெண்மணிக்கு யார் மீதாவது சந்தேகம் உண்டா?''

''சந்தையில் மாடு விற்கச் சென்றது முதல் வீட்டிற்குத் திரும்பும் வரையில், அதே ஊரைச் சேர்ந்த ஒரு ஆள் அந்தப் பெண்மணியைக் கண்காணித்திருக்கிறான். அவன் மேல்தான் அந்தப் பெண்மணிக்குச் சந்தேகம். ஆனால், நாங்கள் அந்த நபரை விசாரித்து விட்டோம். ஒரு பயனும் இல்லை.''

''ஏதாவது தடயம் கிடைத்ததா?''

இன்ஸ்பெக்டர் ஐந்து நிமிட நேரம் யோசித்தவாறு இருந்தார்.

''பளிச்சென்று சொல்வதுபோன்று தடயங்கள் எதுவுமில்லை'' என்றவர், ''நான் அடுத்தமுறை வரும்போது இது பற்றிப் பேசுகிறேன்'' என்று எழுந்து கொண்டார்.

கிளம்ப எத்தனித்தவர், மீண்டும் சட்டென்று அமர்ந்தார். ''சார், நாங்கள் முதன் முதலாக அந்தப் பெண்மணியை விசாரித்த போது, 'பாழாய்ப் போனவன் பணத்தை எடுத்தது மட்டுமல்லாமல், நான் கஷ்டப்பட்டுப் போட்ட வடகத்தையும் எடுத்துட்டு போய்ட்டானே' என்று சொன்னார். இது இந்த வழக்குக்கு எந்த வகையிலாவது உதவுமா?'' என்று கேட்டார்.

இன்ஸ்பெக்டர் சொன்ன இந்தத் தடயம் என்னைக் கொஞ்சம் யோசிக்க வைத்தது. பளிரென்று சில விஷயங்கள் தோன்றி மறைந்தன. ''இது போதும் இன்ஸ்பெக்டர்; நீங்கள் உடனே ஒன்று செய்யுங்கள். அந்தப் பெண்மணி வீட்டில் திருடு போனது தவிர மிச்சம் உள்ள வடகம் பானையில் இருக்குமல்லவா? அந்தப் பானை, அது தவிர அந்தப் பெண்மணி வீட்டிற்கு இரு பக்கத்திலும் இருக்கும் வீடுகளில் உள்ள வடகப் பானைகள், அப்புறம் சந்தேகப்படும் படியாக உள்ள அந்த

நபரின் விட்டிலுள்ள வடகப் பானை, ஆகியவற்றை எடுத்துக்கொண்டு வந்து விடுங்கள், முயன்று பார்க்கலாம்" என்றேன்.

இன்ஸ்பெக்டர் நம்பிக்கையுடன் 'விடை பெற்றுக்கொண்டார்.

அடுத்த நான் என் பரிசோதனை மேஜையில் வடகத்துடன் நான்கு பானைகள் இருந்தன! சக அதிகாரிகள் "என்னப்பா, ஏதாவது சமையல் வகுப்பு எடுக்கப் போறியா?" என்று கிண்டல் செய்தார்கள்.

நான் அப்போது மாநில தடய அறிவியல் ஆய்வகத்தில் உதவி இயக்குனர் பொறுப்பில் இருந்தேன். பணியில் சேர்ந்து நான்கு ஐந்து மாதங்கள்தான் இருக்கும்.

எல்லோரும் சீரியஸான விஷயங்களை அலச, நான் மட்டும் வடகப்பானை கேஸை விசாரிக்கிறேன் என்று கிண்டல் செய்தார்கள்.

ஆனால், இயக்குநரான டாக்டர் நடராஜன் மட்டும், "கலாட்டா பண்ணாதீங்கப்பா... இயற்பியல் (physics) படித்தவர் தம்பி. அதைப் பயன்படுத்தி கண்டுபிடிப்பான் பாருங்கள்" என்று என்னை உற்சாகப் படுத்தினார்.

இந்த இடத்தில் வடகம் என்ற பொருளைப் பற்றி நான் சொல்லியாக வேண்டும். கிராமங்களில் ஒவ்வொரு வீட்டிலும் இருக்கும் வடகம் கொஞ்சம் வித்தியாசமாகவே செய்யப்பட்டிருக்கும். பொதுவாக வெந்தயம், சீரகம், கடுகு, மிளகு மற்றும் வெங்காயத்தை அரிந்து எண்ணெய் கலந்து உருட்டி சிறு சிறு பந்துகளாகச் செய்வார்கள். பின்னர் அவற்றை வெயிலில் காய வைத்துப் பானையில் எடுத்து வைத்துக் கொள்வார்கள். சிலர் என் போடுவதும் உண்டு. வேறு பலர் பூண்டு போடுவார்கள். அதேபோல் சிலர் நல்லெண்ணெய் உபயோகிப்பார்கள். கடலெண்ணெய் மற்றும் விளக்கெண்ணெயை உபயோகிப்பவர்களும் உண்டு. இந்த வேறுபாடுகள் எனக்கு நன்கு தெரிந்திருந்ததால், ஒரு நம்பிக்கையுடன் வடக ஆராய்ச்சியில் இறங்கினேன்.

முதலில் சந்தேகப்படும் நபரின் வீட்டு வடகப் பானையைச் சோதனை செய்தேன். பானையின் மேற்புறம் இருந்த வடகத்துக்கும், அடிப்புறம் இருந்த வடகத்துக்கும் வேறுபாட்டைப் பார்க்க முடிந்தது. பணம் திருடுபோன பெண்மணி வீட்டு வடகம், சந்தேகத்துக்குரிய நபரின் வீட்டுப் பானையில் மேற்புறமாக இருந்தது! அடிப்புறமாக இருந்த வடகம், பெண்மணியின் இரு பக்கத்து வீட்டு



"என்னங்க இது... பையனுக்குக் காது குத்தணும்னா சினிமா கதை எழுதுறவரை அழைச்சுட்டு வந்திருக்கீங்க?"

"நீதானே, அனுபவம் உள்ளவரா அழைச்சிட்டு வரச் சொன்னே, இவர் எவ்வளவு ரசிகர்களுக்குக் காது குத்தி இருக்காரு தெரியுமா?"

— தஞ்சை தாமு

வடகம் ஆகியவற்றைத் தீவிரமாக ஒப்பிட்டுப் பார்த்தேன். ஒவ்வொன்றிலும் உள்ள பொருட்களைப் பகுத்தாய்ந்து தனித் தனியாக விஞ்ஞான முறைகளைக் கையாண்டு ஊடுருவிப் பார்த்தேன். சோதனை செய்த ஐந்து விதமான வடகங்களில் சந்தேகப்படும் நபர் வீட்டில் பானையில் மேற்புறமாக இருந்த வடகமும், பெண்மணி வீட்டின் வடகமும் ஒரே குணாம்சத்தைக் கொண்டிருந்தன. "சபாஷ்" என்று எனக்கு நானே முதுகில் தட்டிக்கொண்டு முயற்சியைத் தொடர்ந்தேன். "க்ரமடோக்கிராபி" என்ற சோதனையின் மூலம் பெண்மணி வீட்டு வடகமும், சந்தேகப் பேர்வழியின் வீட்டுப் பானையில் மேற்புறமாக வைக்கப்பட்டிருந்த வடகமும் ஒரே விதமான எண்ணெயில் செய்யப்பட்டிருந்தது புரிந்துவிட்டது. தெளிவு பிறந்துவிட்டது!

இன்ஸ்பெக்டரை அழைத்தேன். சோதனையின் முடிவைச் சொன்னேன். போலீஸ் கொஞ்சம் அதிரடியாக விசாரிக்க, அந்த நபர் திருடியதை ஒப்புக்கொண்டார். பெண்மணிக்குப் பணம் கிடைத்துவிட்டது. வடக ஆராய்ச்சிக்கு இரண்டு வார காலமும், அரசுக்கு 6000 ரூபாயும் செலவானது!

**1965** தொடங்கி ஆறு வருட காலம் உதவி இயக்குனராகவும், 22 வருட காலம் தடய அறிவியல் துறையின் தலைவராகவும் பணியாற்றியபோது கிட்டத்தட்ட ஒரு லட்சம் வழக்குகளில் தடய அறிவியலைப் பயன்படுத்தி, குற்றவாளிகளுக்குத் தண்டனையும் அநியாயமாகக் குற்றம் சாட்டப்பட்ட நிரபராதிகளுக்கு விடுதலையும் வாங்கிக் கொடுத்திருக்கிறேன். மனித வெடிகுண்டு காரணமாகத்தான் ராஜீவ் கொலை செய்யப்பட்டார் என்று கண்டு பிடித்தது முதல், ஆட்டோ சங்கர் கேஸ், புத்தூர் நடராஜர் சிலை கேஸ், ஸ்பென்சர் மற்றும் எல்.ஐ.சி எரிந்து போனதற்கான காரணங்களைக் கண்டுபிடித்தது போன்ற முக்கியமான வழக்குகளைப் பட்டியலிட்டுக் கொண்டே போகலாம். இருந்தாலும், நான் பணியில் சேர்ந்தவுடன், முதன்முதலாக எடுத்துக்கொண்ட இந்த வடகக் கேஸ் முதல் காதல் போல இன்றும் என் நெஞ்சில் பசுமையாக இருக்கிறது!

**சி**தம்பரம் அருகிலுள்ள கீழச்சாவடி என்னும் சிறு கிராமத்தில் பிறந்து கால் கடுக்க ஏழெட்டு கி.மீ நடந்து சென்று பள்ளிப் படிப்பை முடித்து, அதன் பின்னர் அண்ணாமலையில் இயற்பியலில் முதுகலைப் பட்டம் பெற்றேன். என்னை உயரமான சிகரத்தில் கொண்டு நிறுத்தியது தடய அறிவியல் துறைதான். துவக்க காலத்தில் என்னை ஊக்கப்படுத்தி இந்தத் துறையில் எனக்கு முழு ஈடுபாட்டையும் உண்டாக்கியவர் எனது ஆசான் டாக்டர் ஏ.ஆர். நடராஜன். இந்தத் துறையில் நான் பெற்ற வெற்றிகள், பத்மபூஷன் போன்ற விருதுகளை வாங்கிக் கொடுத்ததோடு அரசியல்வாதிகளோடும், வி.வி.ஐ.பிக்களோடும் நட்பை ஏற்படுத்திக் கொள்ளவும் உதவியது. என் துறை சம்பந்தமாகவும், வேறு பல காரணங்களுக்காகவும் தமிழகத்தின் முதல்வர்களாக இருந்தவர்களை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

இப்படித்தான், எம்.ஜி.ஆர். அவர்கள் ஆட்சிப் பொறுப்பிற்கு வந்திருந்த நேரம். திடீரென்று முதல்வர் அலுவலகத்தில் இருந்து – "மொலாஸஸ்" (சர்க்கரை உற்பத்தியில் கிடைக்கும் கழிவு) பற்றிய முழு விவரங்களுடன் முதல்வரைச் சந்திக்க வேண்டும் என்று தொலைபேசியில் அழைப்பு வந்தது. மொலாஸஸ் பற்றிய முழு விவரங்களையும் தயாரித்துக் கொண்டு எம்.ஜி.ஆரைக் கோட்டையில் உள்ள வசந்த மண்டபத்தில் சந்தித்தேன். அதைப் படித்துப் பார்த்த எம்.ஜி.ஆர். மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அப்புறம் கொஞ்சம் இடைவெளி விட்டுப் பேசத் தொடங்கினார்.

"புரபசர், ரொம்ப நாட்களாகவே உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். ராதா அண்ணன் என்னைச் சுட்ட வழக்கில் நீங்கள் போலீஸ் விசாரணைக்குப் பெரிதும் உதவி செய்தீர்கள். ஆனால், அந்த விவகாரத்தில் எனக்கு ஒரு முக்கியமான சந்தேகம் இருக்கிறது" என்று சொல்லி நிறுத்தினார். அடுத்து அவர் கேட்ட கேள்வியில், நான் கொஞ்சம் ஆடித்தான் போனேன்!

(தொடரும்)

Where the
**175 CENTRES**
**all over South India**
Quality meets Cost

**Now also at Srilanka**

These are the powers to build my career



e-Com

Oracle 8

Java 2

Auto CAD 2000

Ms Office 2000

VB 6.0

JUST FINISHED X, XII, DIPLOMA OR COLLEGE EXAMS?

| Your MARKS | SCHOLARSHIP |
|---|---|
| Above 90% | 75% |
| 80% to 90% | 60% |
| 60% to 79% | 50% |
| 50% to 59% | 40% |
| 40% to 49% | 30% |

# MERIT 2000

## upto 75% Scholarship

ON TOTAL FEES

**OPEN FOR LIMITED CANDIDATES ONLY**
ON FIRST COME FIRST SERVE BASIS
*Fill up the entry form and submit it (in person) with Copy of the Marksheet at the earliest to avoid disappointment.*

**ENTRY FORM**

**Name** : ______________________

**Age** : ________ **Sex** : ________

**Address** : ______________________

______________________

______________________

______________________

**Mark Obtained** : ___ % **Scholarship earned** ___ %

**Qualification: 10th / +2 / DIPLOMA / UG / P.G.**

# CSC®

**COMPUTER EDUCATION**

● க. பூங்கொடி, சித்தோடு.

*? பெண் கொடுமையைத் தடுக்க ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பூலான்தேவி உருவாக வேண்டும் என்கிறாரே பூலான் தேவி?*

! சராசரி இந்தியப் பெண்கள் புத்திசாலிகள். பூலான் தேவியின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்க மாட்டார்கள்!



* வாழ்க்கைப் பாடம்!

● எஸ். சரவணன்,
மோகனூர்.

*? சிவசேனைத் தலைவர் பால் தாக்கரேவுக்கு ஆதரவாக மூன்று மத்திய அமைச்சர்கள் ராஜினாமா செய்திருப்பது பற்றி?*

! போன மச்சான்கள் திரும்பி வருவார்கள்; பூமணத்தோடே!



* விளையாட்டல்ல!

● சி.கொ.தி. முருகேசன், கோபி. ★

*? கார்கில் வெற்றியின் ஓராண்டு நிறைவை வெற்றி விழாவாகக் கொண்டாடுவது சரியா?*

! வெற்றியைக் கொண்டாடி எதிரிக்கு எரிச்சல் ஊட்டுவதைக் காட்டிலும் சமாதான தினமாகக் கொண்டாடி சுமுக உறவை வளர்த்து உயிர்த்தியாகம் செய்தவர்களுக்கு அஞ்சலி செலுத்துவது நல்லது.

● எம்.டி. ரவிகாந்த், காஞ்சிபுரம் – 1.

*? பிரபல கிரிக்கெட் வீரர்களின் இல்லங்களில் வருமான வரித்துறையினர் நடத்திய அதிரடி சோதனைகள் குறித்து?*

! சோதனைகள் அதிர்ச்சி தரும். ஆதாரங்களை அளித்திருப்பதாகத் தெரியவந்துள்ளது. கபில்தேவ் பெயரைப் பாடப் புத்தகத்திலிருந்து நீக்கினால் போதாது. கிரிக்கெட்டுக்கு ஏற்பட்டுள்ள அவப்பெயரை ஆட்டக்களத்திலிருந்து நீக்கியாக வேண்டும். அதற்கு விசாரணை சுறுசுறுப்பாக முடிவடைந்து, அதைத் தொடர்ந்து நடவடிக்கை அதனினும் விரைவாக எடுக்கப்பட வேண்டும்.

● அஜார், தேனாம்பேட்டை.

*? இனி வரும் அறிவியல் யுகத்தில் தமிழால் ஏதும் பயன் உண்டா?*

! 'வைடமின் மாத்திரை சாப்பிட்டால் போதாதா? சோறு வேறு தின்ன வேண்டுமா?' என்று கேட்பது போலிருக்கிறது உங்கள் கேள்வி.



* அறிவிப்பும் ஆபத்தும்

● மு. கனிமொழி,
விழுப்புரம்.

*? 'ஜெ'யின் வாழ்க்கையிலிருந்து பெண்கள் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம் என்ன...?*

! இப்படிப்பட்டவருக்கு வோட்டுப் போடக் கூடாது என்பதுதான்.



* வீடுதோறும்...!

## 'ஜெ' வாழ்க்கை உணர்த்தும் பாடம் என்ன...?

● சி. இரவிச்செல்வன்,
கல்பாக்கம்.

*? பசுவதையைக் கண்டித்து காலவரையற்ற உண்ணாவிரதம் மேற்கொள்ளப் போவதாக ஜெயேந்திரர் அறிவித்திருப்பது குறித்து...?*

! அரசியலில் ஆன்மீகம் அவசியமானது. ஆன்மீகம் இல்லா அரசியல் ஆபத்தானது. ஆனால் ஆன்மீகத்தில் அரசியல் தேவையில்லை. அதைப் புகுத்துவதும் ஆபத்தானதே!

● எஸ். ஏ. கேசவன்,
இனாம்மணியாச்சி. ❑

*? போகிற போக்கைப் பார்த்தால் மத்திய அரசு மாநில அரசுகளிடம் சுயாட்சி கோர வேண்டியிருக்கும் போல் தெரிகிறதே?*

! சரியான வார்த்தை! பிடியுங்கள் பரிசை! இதைக் கூடிய சீக்கிரம் உணர்ந்து நமது நாடாளுமன்றப் பிரதிநிதிகள் மாநில சுயாட்சிக்கு வழிவகுத்து அதன் மூலம் மத்திய அரசும் பலம் பெற்று சுதந்தரமாகவும் சிறப்பாகவும் இயங்க உதவ வேண்டும்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : ச. அ. கேசவன், 341/3, பைபாஸ் சாலை, இனாம் மணியாச்சி, கோவில்பட்டி - 628 502.

★ ரூ. 25 பரிசு பெறுபவர் : சி.கொ.தி. முருகேசன், பி.எஸ்.ஜி. காலனி, 70, காமராஜர் வீதி, கோபி - 638 452.

# அதிசயங்கள் நிகழ்த்தும் அற்புத மருத்துவர்



• சென்னை தேனாம்பேட்டையைச் சேர்ந்த ஜெய்சங்கர்-மாரியம்மாள் தம்பதிகள்

நாங்கள் திருமணமாகி 6 வருடமாகியும் குழந்தையில்லாமல் பல மருத்துவமனைகள் ஏறி இறங்கினோம். **டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்** அவர்களிடம் சிகிச்சை பெற்ற 3 மாதத்திலேயே கர்ப்பம் அடைந்து இப்போது 6 மாத கர்ப்பிணியாக இருக்கிறேன்.

• கோயம்புத்தூரை சேர்ந்த 38 வயது கல்தான் பீவிக்கும் இதே நிலையிலிருந்து சிகிச்சைக்குப்பின் கர்ப்பம் அடைந்துள்ளார்

---

**எனக்கு(கிளியம்மாள், மாதவரம் பெரிய சேக்காடு எண்11,** பெருமாள் கோவில் தெரு) உடலில் உப்பு அதிகமாக இருப்பதாக சென்னையில் சில மருத்துவமனைகளில் சுமார் 5 வருடம் சிகிச்சை பெற்று பின் பல பரிசோதனைக்குப் பிறகு என் கிட்னி ஃபெயிலியர் ஆகி விட்டதாகவும், அதை மாற்றம் செய்வது தவிர வேறு வழியில்லை என்றும் கூறப்பட்டேன். அதற்கு லட்சக் கணக்கில் செலவு செய்யப் பணம் என்னிடம் இல்லாத காரணத்தால் ராயப் பேட்டையில் உள்ள **ரப்பானி வைத்திய சாலா**வில் காண்பித்தேன். ஒரே மாதத்தில் யூரியாவின் அளவு குறைந்து இனி கிட்னி மாற்ற வேண்டிய அவசியம் இல்லை என்று டாக்டர்கள் கூறிவிட்டார்கள்.



• கிளியம்மாள்

---



E. இராமு

**நான் (E. இராமு 51/60, மாணிக்க விநாயகர் கோவில் தெரு, பெரம்பூர், சென்னை – 39**

கடந்த 10 ஆண்டு காலமாக சோரியாசிஸ் நோயால் கடுமையான பாதிப்புகளுக்கு உள்ளானேன். பல மருத்துவர்களிடம் காண்பித்தும் பலன் ஏற்படவில்லை. 12.8.99 அன்று **ரப்பானி வைத்தியசாலா**வில் காண்பித்து மருந்து வாங்கி சாப்பிட்டேன். இன்று புதிய தோலுடன் புதிய மனிதனாக மாறியுள்ளேன். இனி இந்த மருத்துவர் காட்டி வரும் வழியே மருத்துவத்திற்கு சிறந்த வழி என்று என்னை போல் அவதியுறும் அனைவருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

**D.ராணி, 518 N.V.N. நகர், திருமங்கலம், அண்ணாநகர் மேற்கு, சென்னை – 40.**

எனக்கு சுமார் 5 வருடமாக முதுகு மற்றும் கை, கால்களில் ஜாய்ன்ட்டுக்கு ஜாய்ன்ட் **(Joint)**தாங்கமுடியாத அளவிற்கு வலி ஏற்பட்டு பல டாக்டர்களிடம் சென்று **X-ray** எடுத்துப் பார்த்ததில் என் முதுகு எலும்பு நகர்ந்திருப்பதாயும் ஆபரேஷனே வழி என்றும் கூறிவிட்டார்கள். பின் சில அனுபவசாலிகளின் அறிவுரைப்படி **ரப்பானி வைத்தியசாலா** சென்றேன். ஒரே மாதத்தில் நம்ப முடியாத அளவிற்கு முன்னேற்றம் ஏற்பட்டு இப்போது நன்றாக நடமாடுகிறேன்.



**D.ராணி**

---

மேலும் அல்சர், B.HEPATITIS கை, கால் வாதம், லிவர் பெயிலியர், மூலம், ஆண்மைகுறைவு, நரம்புத்தளர்ச்சி போன்றவை நல்ல முறையில் குணம் அடைகின்றன.

## டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்



## ரப்பானி வைத்ய சாலா

**73/1, டாக்டர் பெசன்ட் ரோடு, மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில், இராயப்பேட்டை,**

**சென்னை – 600 014. போன்: 8510969, 8410874**



# வருகிறது நாயுடு டி.வி!

ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடு ஒரு சாடிலைட் சானல் தொடங்குகிறார். ஆயினும் தனிப்பட்ட முறையில் இல்லாமல், ஆந்திரப் பிரதேச மாநில அரசாங்கத்தின் சார்பில் இந்த டி.வி. சானல் ஆரம்பிக்கப்படவுள்ளது.

சொந்தமாக ஒரு சாடிலைட் சானல் ஆரம்பிக்கிற எண்ணம் சந்திரபாபு நாயுடுவுக்கு ரொம்ப நாட்களாகவே இருந்து வந்தது என்றாலும், சமீப காலத்தில்தான் அவர் இது பற்றித் தீவிரமாகச் சிந்தித்தார்.

அடுத்தக்கட்டமாக, சாடிலைட் சானல் ஒளிபரப்புக்கு அத்தியாவசியமான டிரான்ஸ் பாண்டரை சொந்தமாக வாங்குவதா, அல்லது நீண்டகாலக் குத்தகைக்கு எடுத்துக் கொள்வதா என்பது பற்றித் தீர்மானிக்கும் பொறுப்பை நாயுடு, தனக்கு நெருக்கமான தகவல் தொழில் நுட்ப வல்லுனர்கள் சிலரிடம் ஒப்படைத்திருக்கிறார்.

இப்போது, திடீரென்று இதற்கான முயற்சிகள் சூடு பிடித்திருப்பதற்குக் காரணம் இல்லாமல் இல்லை.

சட்டசபைத் தேர்தலில் அமோக வெற்றி பெற்று, ஆட்சியைத் தக்க வைத்துக் கொண்டது தெலுங்குதேசம் கட்சி. என்றாலும்கூட, அண்மையில் மின்சாரக் கட்டணத்தை உயர்த்திய நாயுடுவின் நடவடிக்கைக்கு மாநிலம் தழுவிய எதிர்ப்பு ஏற்பட்டுள்ளது. அரசியல் கட்சிகள் மட்டுமின்றி விவசாயிகள் தொடங்கி, குடும்பத் தலைவிகள் வரை பல தரப்பட்ட மக்களும் போராட்டத்தில் இறங்கியுள்ளனர். பள்ளி மாணவர்கள் டிராயர், சட்டை இல்லாமல் போராடியது, குடும்பத் தலைவிகள் ஆட்டுக்கல், விசிறி, லாந்தர் விளக்கு ஏந்திப் போராடியது - இவை சில உதாரணங்கள்.

மேலும் மலைவாசி மக்களுக்கான நிலச் சீர்திருத்தச்சட்டம் ஒன்றும் பலத்த சர்ச்சைக்குள்ளாகி இருக்கிறது.

இவற்றையெல்லாம் சமாளிக்கத்தான் அரசாங்கத்தின் சார்பில் சாடிலைட் சானல் ஆரம்பிக்க முடிவு செய்திருக்கிறார் நாயுடு.

புது சானலுக்கு என்ன பெயர் வைப்பது என்று இன்னும் முடிவு செய்யப்படவில்லை என்றாலும் எதிர்க்கட்சிகளும், பத்திரிகைகளும் 'பாபு தர்ஷன்' என்று பெயரிட்டுக் கிண்டலடித்துக் கொண்டிருக்கின்றன.

புதிய சானல் மூலம் தினமும் மக்களை நேரிடையாகச் சந்திக்கத் திட்டமிட்டிருக்கிறார் நாயுடு. சட்டசபை நிகழ்ச்சிகளை மட்டுமின்றி, மாநகராட்சி கூட்டங்களையும் நேரடியாக ஒளிபரப்ப உள்ளனர். தனது அரசில் எதுவும் ஒளிவு மறைவு இல்லை; வெளிப்படையாகவே எல்லாம் நடக்கின்றன என மக்களுக்குக் காட்டுவதும் நாயுடுவின் திட்டம்.



அதெல்லாம் சரி! தூர்தர்ஷன் போல ஒரு சானல் ஆரம்பித்தால், இந்த சாடிலைட் யுகத்தில் எடு படுமா? ரபிபெர்னார்டிடம் இது குறித்துக் கேட்டோம்:

"இந்த முயற்சி ஒரு வகையில் காலத்தின் கட்டாயம் எனலாம். அமெரிக்காவிலும் மற்ற பல முன்னணி நாடுகளிலும் கூட, அரசுக்குச் சொந்தமான சாடிலைட் சானல் என்பது நடைமுறையில் இருக்கும் ஒன்றுதான். ஆனால் நம் ஊரில் தூர்தர்ஷன் என்ற சவலைப் பிள்ளை, மத்திய அரசின் மௌத்பீஸ் என்ற மாறாத நிலையில் இருப்பதால், நாயுடு இப்படி ஒரு முயற்சியில் இறங்கியிருக்கிறார்.

இது ஒரு விவேகமான முடிவுதான்! எதிலும் புரொபஷனலிஸத்தைக் கடைபிடிக்கும் நாயுடு, இதில் மட்டும் சோடை போக மாட்டார்!"

— கௌதம் ராம்

# 7

க.சீ. சிவகுமார்

தங்கராஜ், ரவிச்சந்திரன், கலைச் செல்வன், அன்வர் எல்லோரும் போனபின் பிரகாஷும் பார்த்திபனும் இருந்தனர்.

பார்த்திபன், "அனிதா வீட்டுக்குப் போலாமா" என்றான்.

"ம். போவோம். நேத்தே போயிருக்கலாம்."

"நாளைக்குப் போவமா?"

"உனக்குக் கிறுக்குக் கிளம்பிட்டுது. ஒண்ணும் பண்ண முடியாது."

"சரி...சரி...வா போவோம்."

அனிதாவின் வீட்டுக்குள் நுழைந்தபோது அம்சவல்லி, "என்னப்பா நேத்து ரெண்டு பேரையும் ஆளயே காணம். ஸ்டிரைக் பத்திக் கேப்பேன்னு வராம இருந்துட்டிங்களா?" என்றாள்.

"அதெல்லாம் இல்ல. அப்படியே போய்ட்டம்" என்றான் பிரகாஷ். பார்த்திபனின் கண்கள் அனிதாவைத் தேடிக் கொண்டிருந்தன. வருகிற நேரம் வாசலில் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. வரவேற்பறையிலாவது இருக்க வேண்டாமா என்ற அடிநாத ஆதங்கம் எழுந்தது.

உடைமாற்றும் அறையாகவும் படுக்கை அறையாகவும் பயன்பட்ட அறையிலிருந்து அனிதா வெளி வந்தாள். சீருடையைக் களைந்துவிட்டு பாவாடை சட்டையிலிருந்தாள். இந்தக் கோலத்தைப் பையன்கள் இருவருமே எதிர்பார்த்திருக்கவில்லை. வழக்கமாக சல்வார் கம்மீஸிலிருப்பாள் அல்லது பாவாடை தாவணியிலிருப்பாள். இப்போதோ மரகத நிறப் பாவாடைக்கு மேலாக ஆண்பிள்ளைச் சட்டை அணிந்திருந்தாள். அப்பா நடேசனுடையதாய் இருக்கலாம். சிவப்பு நெடு வர்ணங்கள் கொண்ட வெள்ளை முழுக்கைச் சட்டை. மணிக்கட்டிலிருந்து இருமுறை மடித்து சட்டைக்கையை வளையலுக்கு மேலாக விட்டிருந்தாள். கைக்கு ஒற்றையாய் பொன் வளையல்கள். அது மெழுகு போல் உருகும் எனில் அவளது தோல் நிறத்தில் அழுந்தி அந்தர்தியானமாகிவிடும். பார்த்திபன் மிடறு விழுங்கினான்.

"உட்காரு பார்த்தி" என்றவள் இருவரையும் ஒரே தட்டில் வைத்துப் புன்னகைத்தாள். வலது நெற்றிப் பொட்டருகே முடி கோதினாள். பின்னலின் ரப்பர் பேண்ட்டுக்குள் அடைபடாத பதின்மூன்று முடிக் கற்றையொன்று காற்றாடிச் சரிந்தது முன்நெற்றியிலும் கன்னத்திலும்.

"பிரகாஷ் லெட்டர் குடுத்தானா?" பார்த்திபனுக்கு உள்ளே சொய்ங் என்றது. அம்சவல்லிக்கு இந்த வார்த்தை எட்டி விடக் கூடாது என்று விரும்பினான். இவன் ஏன் இப்படிக் கத்துகிறான். மீண்டும் ஒரு 'சொய்ங்' பூரணம் வேண்டி பஜ்ஜிமாவு எண்ணெயில் மூழ்கும் சத்தம் அது.

"கொடுத்தான். இன்னிக்குக் கூட வா...டயமிருந்தா."

"சொல்லாம...தானாக் கூப்பிடணும்னு உனக்கு தோணவே இல்லியா?" கண்களைச் சுருக்கிக் கொண்டாள். இடது புறங்கையின் சுட்டுவிரலால் இமைமூடிய கண்ணின் மீது கோடிழுத்தாள். அழுகிறாளாம். அது பார்த்திபனுக்குப் பிடித்திருந்தது. பிரகாஷுக்குப் பிடிக்கவில்லை.

"அனிதா! என்னிக்கு வர்றே? சனிக்கிழமை வர்றியா. கரெக்டாச் சொல்லு. அவங்கம்மா எதாச்சும் வடை, பாயசம்னு பண்ணி வைப்பாங்க... நேரம்"

"நீயும் தானே வருவே... உனக்கும் எல்லாம் கிடைக்கும்" என்றாள் அனிதா பிரகாஷிடம்.

உள்ளேயிருந்து அம்சவல்லி பஜ்ஜி கொண்டு வந்தாள்.

"நீங்க எங்க வீட்டுக்கு வாங்க. எங்கம்மா உங்களைப் பாக்கணும்னு சொல்லிக்கிட்டே இருக்காங்க" என்றான் பார்த்திபன் தயக்கத்துடன். அவர்

தன் வீட்டுக்கு வரவேண்டும் என விரும்பிய நேரம் அனிதா மட்டும் வந்தால் தேவலை என்றும் மனம் விரும்பியது. நேசம் பல சமயங்களில் பின்ன எண்களைப் போல் இருக்கிறது.

அனிதா அம்சவல்லியிடம், "அம்மா! நீ வந்தாலும் வரலீன்னாலும் நான் சனிக்கிழமை பார்த்திபன் வீட்டுக்குப் போறேன்" என்றாள்.

"போய்ட்டு வா.... பார்த்தி நீ வந்து அழைச்சுக்கிட்டுப் போறியா?"

"சரிங்க."

வெள்ளிக்கிழமை பள்ளி முடிந்ததும் பார்த்திபனும் பிரகாஷும் நேராக பார்த்திபனின் வீட்டுக்குப் போய்விட்டார்கள். இரவு அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது பார்த்திபனின் அம்மா ராசம்மா,

"ஏம்பா... இன்னிக்கு ஆத்துப் பக்கம் போறீங்களா?" என்றாள். அவர்களது முகச் சுடரிலிருந்தே இரவு பையன்கள் தூங்க மாட்டார்கள் எனக் கணித்து விட்டாள்.

"ம்" என்றான் பிரகாஷ்.

பார்த்திபனும் பிரகாஷும் ஆறு நோக்கி நடந்தார்கள். குறைந்த நிலவு. வீட்டிலிருந்து அரை கி.மீ. கிழக்கே நடந்தால் அமராவதி தென் வடலாக திசை நீண்டு தெற்கு முகம் கொண்டோடியது. அவர்கள் வழக்கமாய் அமரவென்று ஒரு பரப்பு உண்டு. அவ்விடமிருந்து குடிநீர் வாரியம் கட்டிய சந்திரக் கிணறுகள் ஒத்தமாந்துறை ஆற்றுப் பாலப் படுகை நாணல்கள் என காட்சி தெரியும். தூரத்தில் மங்கலாக பார்த்திபன் வீட்டு மச்சில் தெரிகிற அறுபது வாட் பல்பு எரியும். அது வீட்டின் அருகாமையில் அமர்ந்திருக்கிறதான காப்புணர்ச்சியையும் தரும். பேச எதுவுமற்று காலமும் காற்றும்



உறைந்தாற் போலிருந்தது. உறைந்த இருள் நேரத்தைக் கிழித்துக் கொண்டு பிரகாஷ்,

"இது எங்கே முடியும்னு தெரியலியே" என்றான். இருவருக்கும்

பொதுச் சரடாய் அனிதா ஓடிக் கொண்டிருந்தாள். முன் தீர்மானங்களின் முகப்புகளின்றி அவன் சட்டென ஆரம்பித்தாலும் அது இதுதான் என்பதான தெளிவில், லய சங்கமம் இருந்தது. பார்த்திபனுக்குத் தெளிவான பதிலில்லை. பதில், நூலாம் படையாலான பந்து போலச் சுருண்டிருந்தது. தனி இழையை எடுத்து நீட்டி, தெளிந்த பதிலை உருவி விட முடியாது. குழம்பியடித்தது மனம்- குறுநீரின் அமராவதி அலை போல இரவின் கருஞ்சலசலப்பு. இருள் அதிராதபடி ஆறு ஓடுகிறது. அருகில் ஒரு கணம் பார்த்திபனுக்கு அனிதா தோன்றி மறைந்தாள். ஆயிரம் நிலவின் ஒளியுடன். தோன்றி மறைந்த காட்சிக்குப்பின் இரவு சப்பிட்டை விழுதுகளாய்த்



தொங்கிக் கொண்டிருந்தது.

"நிஜமாவே காதலாடா" என்ற பார்த்திபனின் குரல் பரிதாபமாயிருந்தது.

"அனிதாவை விடு. உனக்குக் காதலா உறுதியாய்ச் சொல்லு."

"ஆமா" திடமாகவும் ஆத்திரமாகவும் அவன் சொன்னது திடகாத்திரமாக ஒலித்தது.

"விடியட்டும். வா போவோம்."

**கா**லையில் பிரகாஷ்தான் பார்த்திபனை எழுப்பினான். அனிதாவின் வருகையை நேற்றே வீட்டில் தெரிவித்தாயிற்று. பத்து மணிக்கு மேல் டிவிஎஸ்-50ஐ எடுத்துக் கொண்டு போய் அனிதாவைக் கூட்டி வருவதாக இருந்தான் பார்த்திபன். அப்பாவின் கஸானியை எடுத்துப் போக ஆசைதான் அவனுக்கு. அவர் அதைத் தொட விடுவதில்லை.

காப்பியைக் குடித்து விட்டு உலாவ வரும் தொனியில் இருவரும் வெளிவந்தனர். முகப்பில் உள்ள வழுவழுப்பான தூண் அருகே நின்று அதைத் தடவியவனாக பிரகாஷ் பார்த்திபனிடம்,

"அனிதா பார்க்க வேண்டிய வீடுதான் இது" என்றான்.

கர்வம் ஒளிர்கிற அடக்கமான முறுவலைச் சிந்திதான் பார்த்திபன். அந்த வீடு அவனது தாத்தா கட்டியது. ஊருக்குள் பழைய வீட்டை அப்படியே விட்டு விட்டு தோட்டத்தில் இதைக் கட்டினார். தோட்டத்தில் கட்டிடம் எழுந்ததும் தோட்டத்துக்கு 'மச்சு வீட்டுத் தோட்டம்' எனப் பெயராயிற்று. முகப்பில் குளிர் இழைகிற நான்கு சிவப்புத் தூண்கள். அத் தூண்களால் மயில் மாணிக்கச் செம்பூக்கள் தமது கொடி படர்த்தின. தூண் தாங்கிய கூரைக் கீழாக வாசல் அமைப்பில் பெரும் பரப்பு. அதுவும் கடந்த திண்ணையில் ஐம்பது பேர் தாராள

மாக அமரலாம். அப்புறம் கதவு திறந்து உள்ளே சாவடி. சாவடியின் இரு ஓரத்திலும் சுழல் படிகள் தாமாகவே ஏறி மாடியை அடைந்தன.

சாவடியை அடுத்து கிழக்குப் பார்த்து இரு வீடுகள். சாவடியின் தென்புறக் கதவு திறந்தால் சமையலறை. சாப்பிடும் இடம், குளியலாதி அறைகள். காற்றையும் வெளிச்சத்தையும் குளிர்மையையும் எப்போதும் உணருவதாக இருந்தது 'மச்சு வீடு'. தாத்தா செத்துப் பத்தாண்டுகள் ஆகி விட்டன.

தொலைபேசி மணி அடித்தது. பார்த்திபன் மூணாவது ரிங்கில் அதை எடுத்து விட்டான். அனிதா மகிழ்ந்தாள்.

"நானும் ஜோதியும் மொபெட்டில் வர்றோம். ஒத்தமாந்துறைல வெயிட் பண்ணுங்க. பத்து மணிக்கு வந்துடறோம்."

பார்த்திபனுக்கு வரவுறுதி மகிழ்ச்சியளித்தது. மொபெட்டில் தான் கூட்டி வருகிற பாக்யத்தை இழந்தது வருத்தமளித்தது. கொஞ்ச நேரத்தில் சீர்மையடைந்தான். பாசனாதி திரவத்தில் குளித்து விட்டு வாசனாதி திரவியங்கள் பூண்டான். அம்லா ஹேர் ஆயில். மைசூர் சாண்டல் பவுடர். பிரகாஷும் குளித்து முடித்ததும் இருவரும் ஒத்தமாந்துறை நோக்கி நடக்க ஆரம்பித்தனர்.

"சாப்பிட்டுப் போங்கப்பா" என்றாள் ராசம்மா.

"அனிதாவும் ஜோதியும் வருவாங்க. சேர்ந்து சாப்பிடலாம்."

ஆற்றுப்பாலம் கடந்த வாய்க்கால் பாலத்தில் அமர்ந்திருந்தனர். அந்த இடத்தில் ஆற்றுப் பாலத்துக்கும் வாய்க்கால் பாலத்துக்குமான இடைவெளி வெறும் பதினைந்து அடிகள். கடிகாரம் பார்க்க மறந்து விட்டு வந்த காத்திருப்பு.

"எப்படா வருவாங்க?" என்றான் பிரகாஷ் சலிப்புடன். மைசூர் சந்தன மென்பொடி வாசம் ஏறு வெயிலில் உலர்ந்து கொண்டிருந்தது. தூரக் கிழக்கில் 'காளீஸ்வரி வைத்திய சாலை' அருகில் அனிதாவின் வரவு பச்சைப் பொட்டலமாய்த் தெரிந்தது.

பச்சை சல்வார் கம்மீஸ் அணிந்த அனிதாதான் ஓட்டி வந்தாள் மொபெட்டை. சால்வை கழுத்தை வடம் போலக் கவ்வியிருக்க, இரு முனைகள் கிழக்கு நோக்கி நெளிந்து பறந்தன. அவனது உற்சாகத்தின் இறக்கைப் போல அந்த சல்லாத்துணி பறந்தது. அருகே வந்து பிரேக் போட்டு



**"உனக்கு சட்ட அறிவு இல்லாட்டா போகுது, சராசரி பொது அறிவாவது வேணாம்? பால்கார மூனுசாமி பாலில் தண்ணீர் கலந்து விற்றதை பாலியல் வழக்குன்னு பதிவு செய்திருக்கியே?!"**

**– உ. ராஜாஜி**

நிறுத்திப் புன்னகைத்தாள்.

"நீ எங்கே வந்தே?" என்று ஜோதியை பிரகாஷ் கேட்டான். ஆட்காட்டி விரலை அசைத்து, 'உரிச்சுடுவேன்' என்பதாக ஜோதி பாவனை காட்டினாள். நால்வரும் சிரிப்பின் அகழிக்குள் விழுந்தார்கள். ஒரு தத்தளிப்பு காற்றில் பரவிக் கொண்டிருந்தது பெயர் தெரியாமல்.

"நானும் ஜோதியும் முன்னால போறோம். நீ அனிதாவோட நடந்து வா" என்று அனிதாவிடம் மொபெட்டை வாங்கினான் பிரகாஷ். அவர்கள் சென்று விட்ட உருள் திசையில் பார்த்திபனும் அனிதாவும் பாதம் பதித்து நடந்தார்கள்.

"என்ன பார்த்தி பேச மாட்டேங்கறே? வீட்டுக்கு வரவங்க கூடப் பேசக் கூடாதா?"

"அதில்ல. உன்கிட்ட ஒண்ணு கேக்கணும்."

"கேளு."

"கேக்கறதில்ல சொல்லணும்."

"சொல்லு."

பார்த்திபன் சொல்லத் தலைப்பட்டான். நதிக்கரையும் நதியும் அமைதியாகி விட்டன. பூமியில் அவன் பாதம் நிகழ்த்தும் அழுத்தத்தில் நூறு நூறு காதல் தோன்றி அமராவதியில் அலை மிகும். ஊரைச் சுற்றி ஓடினாலும் ஊரெல்லாம் ஓடும் நதி. வெள்ளிப் பட்டை தெரிய ஒரு மீன் புரளும் காதற் பிரகடனத்தால்.

பாலத்து எதிரில் சுந்தரம் வந்து கொண்டிருந்தார். பார்த்திபனின் அப்பா.

(தொடரும்)




✉ 'முகம்' (கவிதை) என்ற மூன்று எழுத்துகளில் 'நிஜ முகத்தை' மிக அழகாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் 'சிவ சுகவிதா'. எத்தனை முறை படித்தாலும் அலுக்காத கவிதை.

திருச்சி – 17, உஷா முத்துராமன்.

✉ சுயநலத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு பொதுநலத்திற்குப் பாடுபடும் சம்சாராணியின் செயல் இவரை 'அம்சரா்ணி' எனச் சொல்லத் தூண்டியது.

சென்னை – 26, சி. மகேஷ்.

✉ 'அனுஷா லெஷர்' நிறுவனத்தினர் அறிமுகப்படுத்தியிருக்கும் சொகுசு பங்களா ஸ்டைல் வேன், அதில் உள்ள வசதிகள் எல்லாம் ஓ.கே.! ஆனால் அதைக் கொண்டு போய் மூப்பனார் வீட்டு முன்நிறுத்தி என்ன புண்ணியம்?

கபிஸ்தலம், எஸ். இராஜேந்திரன்.

# மூப்பனார் வீட்டுமுன் நிறுத்தி என்ன புண்ணியம்?

✉ 'பீஹாரில் ஜாதி வெறி!' தலையங்கம் படித்தேன். கிரிமினல்களுக்கு அரசியல் அடைக்கலம் கொடுத்த ஆர்.ஜே.டி. செய்தது தவறு என்றால், இப்படிப்பட்டவர்களை தேர்தலில் ஜெயிக்க வைத்த மக்களை என்னவென்று சொல்வது? ஜாதி வெறிக்கு நெய் வார்த்து அதில் குளிர்காயும் லாலு போன்ற அரசியல்வாதிகள் தண்டிக்கப்பட வேண்டுமானால் மக்கள் விழிப்புணர்வு கொண்டு எழுவது தான் ஒரே வழி!

மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்.

✉ கோபாலபுரத்து கூர்க்கா என வாழப்பாடியை அழகுராஜ் திட்டியதைப் படித்ததும் சிரிப்புத்தான் வந்தது. போயஸ் தோட்ட கூர்க்கா என இவரை வாழப்பாடி கூறும் நாள் வெகு தொலைவில் இல்லை.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'ஜெ' ராசி எண்படியே, அவரைப் பற்றிய 'ஆறு லட்ச' செய்திகளை 54ஆம் பக்கத்தில் பிரசுரித்திருக்கிறீர்களே! (5+4).

பாளையங்கோட்டை, ஏ. குமாரவேலு.

## உயரம் தொட்டது சுவாதி மட்டுமா?

✉ 'பற' தொடர்கதை கற்பனை என்று கூற முடியாதவாறு இயல்பாக இருந்தது.

பெங்களூர், என். ஆர். ராஜா.

✉ வாழ்க்கையின் இலட்சியத்தை அடைவதற்குத் தெளிவான தீர்க்கதரிசனமும், தன்னம்பிக்கையும் தளரா உள்ளமும் தேவை என்பதை வெகு பாஸிட்டிவாக (பற) சுவாதி கேரக்டர் மூலம் அருண்சரண்யா சித்திரித்திருந்த விதம் சபாஷ் கூற வைத்தது. ஷ்யாமின் கைவண்ணத்தில் உருவான ஓவியங்கள் தொடருக்கு மேலும் மெருகூட்டின!

நெய்வேலி, கே. சுந்தர்.

✉ வெகு உயரத்தைத் தொட்டது சுவாதி மட்டுமல்ல. 'பற'வைப் படைத்த அருண் சரண்யாவும்தான்.

சென்னை – 86, ஈஸ்வரி ரகு.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# பில்ராத்

## மருத்துவமனை

முதன்முதலில்
அதிநவீன லேசர் கருவியுடன்
லேப்ராஸ்கோப்பி
சிகிச்சை





**BILLROTH HOSPITAL**
24 HOURS SERVICE

## வயிறு

சம்பந்தப்பட்ட அனைத்து
நோய்களுக்கும் ஓர் முழுமையான

## தீர்வு

- அல்சர்
- அபண்டிஸைடிஸ்
- குடல் இறக்கம் (Hernia)
- பித்தப்பை கற்கள் (Gall Bladder Stones)
- கர்ப்பப்பை நோய்
- ஓவரியில் கட்டி எடுத்தல் (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை

சிறப்பு அம்சங்கள்
- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்

♦♦♦

அறுவை இல்லா
## மூல வியாதி
சிகிச்சை

சிறப்பு சிகிச்சை :

❊ லேசர் சிகிச்சை
❊ கிரையோ சிகிச்சை
❊ கதிர் வீச்சு சிகிச்சை

43, லட்சுமி டாக்கீஸ் சாலை, செனாய் நகர், சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

KALKI 6.8.2000

# கல்கி

Satyam Online.com

இணைந்து வழங்கும்



இலவச இணைப்பு

# டாட்காம் ஸ்பெஷல்

நெட் உலகுக்கு
ஒரு குட்டி வழிகாட்டி!

# இயற்கையான சிகப்பழகே உங்களுக்கு கிடைக்கும் பொழுது சாதாரண டால்கம் பவுடரின் முகமூடி எதற்கு ?



அறிமுகம் இமாமி நேச்சுரலி ஃபேர் ஹெர்பல் ஃபேர்னஸ் டால்க்.
மேனியின் உள்ளுக்குள்ளேயே செயல்புரிந்து உங்களுக்கு சிகப்பழகு தரும்.

சாதாரண டால்கம் பவுடரெல்லாம் உங்கள் மேனிக்கு சிகப்பழகு தருவதற்காக ஒரு வெள்ளைப் படிவத்தை விட்டுச் செல்லும். அதாவது, முகமூடி போல !

அதுவும், பகற்பொழுதில் இந்த வெளிப் புறப்படிவம் அழிந்து, அடிப்பகுதியிலுள்ள மேனியின் கறுப்பு நிறம் வெளிப்பட்டு விடும்.

**உள்ளுக்குள்ளிருந்தே இயற்கையான சிகப்பழகு.**

இமாமி நேச்சுரலி ஃபேர் ஹெர்பல் ஃபேர்னஸ் டால்க், உங்கள் மேனிக்கு சிகப்பழகும், புத்துணர்வும் அளிக்கவல்ல உலகிலேயே முதல் ஹெர்பல் ஃபேர்னஸ் டால்க். இமாமி ஹெர்பல் ரிசர்ச்சின் தடைதகர்க்கும் சாதனை 3 வெவ்வேறு வழிகளில் உள்ளுக்குள்ளேயே செயல் புரிந்து உங்கள் மேனிக்கு சிகப்பழகு தருகிறது.



உங்கள் மேனியை சூரிய கதிர்களிடமிருந்து காக்கும் **அலோ வெரா** ஒரு இயற்கையான ஸன்ஸ்கிரீன்.

ஆறு வெவ்வேறு விதமான மூலிகைகளின் ஒப்பற்ற கலவையில் **சந்தனமும்** அடங்கியுள்ளது. இது உங்கள் மேனிக்கு ஊட்டமளிப்பதுடன், ஈரப்பதமும் அளித்து ஆரோக்கியமான, நீடித்து நிலைத்திருக்கும் இயற்கையான ஜொலிப்பையும் தருகிறது.



மொத்தத்தில், பரிசுத்தமான, மிக அரிதான உலகப்புகழ் பெற்ற **ஸ்பெயின் நாட்டு குங்குமப்பூ** உங்கள் மேனிக்குள் ஊடுருவி உள்ளுக்குள்ளிருந்தே செயல் புரிந்து சிகப்பழகை அதிகரிக்கச் செய்கிறது. முகமூடியை தூக்கி எறியுங்கள். மற்றவர் கவனம் உங்கள் மீது திரும்பும்.




**இமாமி நேச்சுரலி ஃபேர்**
**ஹெர்பல் ஃபேர்னஸ் டால்க்**

## ஸ்பெயின் நாட்டு குங்குமப்பூவின் அற்புதம்.

 ஸ்பெயின் குங்குமப்பூ  சந்தனம்  அலோ வேரா  அதிமதுரம்  சாமந்தி  கம்ஃப்ரே



ENTERPRISE NEXUS 3494 T

# நெட் உலகுக்கொரு குட்டி வழிகாட்டி !




வலை அறிமுகம் – 72

தொடங்குங்கள் ஒரு வெப்சைட் – 76

வலைத் திருடன் போலீஸ் விளையாட்டு – 80

வலை வர்த்தகம் – 84

நெட் பத்திரிகைகள் – 92

சொந்தத் திரையில் சின்னத்திரை – 100

யோசனையே முதலீடு – 104

தள்ளாடுகிறதா பிரவுசிங் சென்டர்கள்? – 108

புத்தகக் காடு – 116

வலை வங்கி – 120

ரசிகர் மன்றங்கள் – 124

நமக்குண்டா நெட் பொருத்தம்? – 130



கட்டுரையாளர்கள்:

நரசிம்மன், ஔரங்கசீப், ஜி.எஸ்.எஸ், ஜெயந்தன்

புகைப்படங்கள்:

ஸ்ரீஹரி, வெங்கடேஷ்

**கடைசி[illegible] செய்து கொள்ள வேண்டுமென்[illegible]என்ன?**

ஓட்டலுக்குக் காப்பி குடிக்கப்போனால், சர்வர் கொண்டுவந்த காப்பியில் ஒரு ஈ.

எப்படி இருக்கும் இவர்களது ரியாக்‌ஷன்?

**பிரிட்டிஷ்காரர்:** கோபமாய் காப்பிக் கோப்பையை வீசி எறிந்துவிட்டு, ஓட்டலை விட்டு வெளியேறுவார்.

**அமெரிக்கர்:** ஓட்டல்காரர் மீது நஷ்டஈடு கேட்டு கேஸ்போட்டு, ஆயிரக்கணக்கில் நஷ்டஈடு பெறுவார்.

**சைனாக்காரர்:** ஈயைச் சாப்பிட்டுவிட்டு, காப்பியை வேண்டாமென்று சொல்லி விடுவார்.

**இந்தியர்:** ஈயை எடுத்து சைனாக்காரருக்கும், காப்பியை அமெரிக்கருக்கும் விற்றுவிட்டு அந்தப் பணத்தில புது காப்பி வாங்கிச் சாப்பிடுவார்.

✱

ஒரு டாக்டர் என்றால், எப்படி தர்மசங்கடமான சூழ்நிலைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும், அதை எப்படிச் சமாளிக்க வேண்டும் என்று ஒரு மருத்துவப் பேராசிரியர் மாணவர்களுக்கு விளக்கிக் கொண்டிருந்தார்.

"இதோ, இந்த ஜாடியில் இருப்பது பன்றி ரத்தம்" என்று சொல்லிவிட்டு தன் விரலை அதில் விட்டார். பேராசிரியர் முகத்தில் எந்த வித சலனமும் இல்லை. ஆனால், மாணவர்கள் முகத்தில் அருவருப்பு.

அடுத்து, பேராசிரியர் செய்த காரியம், மாணவர்களுக்கு மிகுந்த அதிர்ச்சியைக் கொடுத்தது. ஆம்! பேராசிரியர் அடுத்து, தன் விரலை வாய்க்குள் வைத்தார்!

"இதுபோல நீங்கள் ஒவ்வொருவரும் இப்போது செய்யவேண்டும்" என்றார் பேராசிரியர்.

வேறு வழியில்லாமல், முகத்தைச் சுளித்துக் கொண்டே, ஜாடியில் விரலை விட்டுவிட்டு, வாய்க்குள் வைத்துக் கொண்டனர். பலருக்கு வயிற்றைக் குமட்டியது.

கடைசியில் பேராசிரியர் சொன்னார்:

"டாக்டர் என்றால் அப்சர்வேஷன் மிக முக்கியம்! இங்கேதான் நீங்கள் அனைவரும் கோட்டைவிட்டு விட்டீர்கள். நான் ஜாடியில் விட்டது மோதிரவிரல். வாய்க்குள் விட்டது நடுவிரல்!"



✱



தூங்கிக் கொண்டிருந்த மனைவி, திடீரென்று கண் விழித்துப் பார்த்தாள். பக்கத்தில் கணவன் இல்லை. பாதி ராத்திரியில் எங்கே போயிருப்பார் என்று வீடு முழுக்கத் தேடினாள். வெராந்தாவில் ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு கணவன் நின்று கொண்டிருந்தான். அவனை நெருங்கி,

"தனிமையில் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"நினைவிருக்கிறதா? பதினாறு வருடங்



களுக்கு முன்பு இதே தினம், உன் அப்பாவுக்கு நம் காதல் தெரிந்து போய், என் மகளைக் கல்யாணம் பண்ணிக் கொள் கிறாயா? இல்லை, போலீசில் புகார் கொடுத்து, உன்னைப் பதினாலு வருடம் ஜெயிலுக்கு அனுப்பி விடுவேன்' என்று மிரட்டினார். நான் பயந்து போய், உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டேன். மறுத்து விட்டு, ஜெயிலுக்குப் போயிருந்தால், இன்று தண்டனை முடிந்து விடுதலை கிடைத்திருக்கும்."

✸

அமெரிக்காவில் ஒரு சாஃப்ட்வேர் இன்ஜினியர் வேலைக்கு ஆள் எடுத்தார்கள். ஒரு அமெரிக்கரும், இந்தியரும் இறுதி ரவுண்டுக்கு வந்தார்கள். இரண்டு பேரிடமும் பத்துக் கேள்விகள் அடங்கிய கேள்வித்தாள் ஒன்றைக் கொடுத்து விடை எழுதச் சொன்னார்கள். எழுதிக் கொடுத்த விடைத்தாளைத் திருத்தியதில் இரண்டு பேரும் ஒன்பது கேள்விக்குச் சரியாக பதில் சொல்லியிருந்தார்கள். ஆனால் தேர்வு செய்யப்பட்டது இந்தியர்தான்.

"நான் அமெரிக்கன். இது அமெரிக்கா. நாங்கள் இரண்டு பேரும் ஒன்பது கேள்விகளுக்குச் சரியாக பதிலளித்திருக்கிறோம். அப்படியும் என்னைப் புறக்கணித்து விட்டு, இந்தியரைத் தேர்ந்தெடுத்தது எப்படி நியாயமாகும்?"

# ஜோக்ஸ்!

என்று அமெரிக்கர் கோபப்பட்டார்.

"சரியான விடைகளின் அடிப்படையில் உங்களை நிராகரிக்கவில்லை; தவறான விடையின் அடிப்படையில்தான் நிராகரித்தோம்" என்றார்கள் கம்பெனியில்.

"இரண்டு பேருமே ஒரு கேள்விக்குச் சரியான பதில் எழுதவில்லையே?" என்று மடக்கினார் அமெரிக்கர்.

"அது சரிதான். ஆனால் இந்தியர் எட்டாவது கேள்விக்கு எழுதிய பதில் 'தெரியாது'. நீங்கள் எழுதிய பதில் 'எனக்கும் தெரியாது!' அதனால் உங்களை நிராகரித்தோம்." ●



# இது சித்தர்களின் சரக்கு கொடோன்!

அப்பனே, முருகா, சிவனே, ஞான பண்டிதா, நாராயணா என உச்சரித்துக் கொண்டிருந்த உதடுகளுக்குக் கூடுதலாகத் தொழுவதற்கொரு கண் கண்ட கடவுளாகவே ஆகி விட்டது இன்டர்நெட். கடவுளைப் போலவே விளங்கிக் கொள்ள முடியாத பல சூட்சுமங்களைத் தன்னகத்தே இது கொண்டிருப்பதால் மிகையான ஒப்பீடு என்று ஆத்திகர்கள் சண்டைக்கு வந்தால் சமாளித்து விடுவது சுலபம். மேலும் இதன் பராக்கிரமத்துக்கு எல்லை என்று ஒன்று இடையாது. வாமன ரூபத்திலிருக்கும் உங்கள் சொந்தக் கணிப்பொறித் திரையில், விசுவரூபமாக முழு உலகையும் இது கொண்டு வந்து நிறுத்தும் வித்தகத்தை உத்தேசித்தும் அப்படியே சொல்லலாம்; தப்பில்லை.

'வலை' என்கிற சொல் ஆரம்பம் முதலே பயன்படுத்தப்பட்டு வந்தாலும் உண்மையில் இது ஒரு சரக்கு கொடோன். சித்தர்களின் சரக்கு கொடோன் என்றும் கூறலாம்.

எந்தப் பொருள் எங்கிருக்கிறது என்று கண்ணுக்குத் தெரியாது. ஆனால் விரும்பிய நேரத்தில், விரும்பி

யதை, விருப்பமான அளவு, வடிவம், தரம், மணம், குணம், நிறத்தோடு சட்டென்று பெற்று விட முடியும்.

ரொம்ப காலம் வரை சிவனே என்று கம்ப்யூட்டர் சமர்த்தாக ஒரு கணக்குப் பிள்ளை வேலை தான் பார்த்துக் கொண்டிருந்தது. என்று தொலைபேசி அதைக் காதலிக்கத் தொடங்கியதோ, அன்று பிறந்ததுதான் இன்டர்நெட். தமிழில் இதற்கு இணையம் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் எல்லாரையும் இணைக்கிற வஸ்து என்கிற அர்த்தத்தில்.

ரத்தமும் சதையுமாக கணிப்பொறித் திரையைத் திறந்து கொண்டு ஒரு குழந்தையைத் தர அல்லது பெற முடியாதது மட்டும்தான் மிச்சம். மற்றபடி காதல் முதல் கல்யாணம் வரை (அல்லது விவாகரத்து வரை) கடலைப் பருப்பு முதல் கணித ஆசிரியர்கள் வரை, வெண்டைக்காய் முதல் விண்வெளி ஆய்வு வரை, விஞ்ஞானம் முதல் மெய்ஞானம் வரை, இலக்கியம் முதல் இசை வரை, வியாபாரம் முதல் நட்பு வரை இந்தப் பெரிய கோடோனில் இல்லாதது இல்லை.

இவற்றை அடைய நமக்கு அடிப்படைத் தேவை ஒரு கணிப் பொறியும் ஒரு சின்ன மோடம் கனெக்ஷனும்தான்.

**எ**ப்படி இந்தக் காரியம் நடக்கிறது என்று பார்ப்பதற்கு முன்பு இதில் என்னென்ன அங்கங்கள் இணைந்திருக்கின்றன என்று தெரிந்து கொண்டால், மேற்கொண்டு வலை உலகில் பயணம் செய்யக் கொஞ்சம் சௌகர்யமாக இருக்கும்.

**ப்ரவுஸர்ஸ் (Browsers)** : வலையினுள் சுற்றி வர வசதி செய்யும் சாஃப்ட்வேர். இதுதான் சுற்றிவரும் நெட் நேயர்களுக்கும் பெயராகி விட்டது! உலக மக்களை 'citizen' என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுவது போல இணைய உலகை வலம் வரும் மக்களை 'netizen' என்கிறார்கள்.

**Internet Service Providers (ISP) :** வெப் உலகினுள் நுழைய, அரசு அங்கீகாரத்துடன் பாதை (Virtual highway) அமைத்துத் தருபவர்கள். அதாவது இவர்கள் மூலமாகத்தான் நாம் இன்டர்நெட் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியும். நம் நாட்டில் வி.எஸ்.என்.எல்., சத்யம் ஆன்லைன், டிஷ்நெட், மந்த்ரா ஆன்லைன் போன்ற நிறுவனங்கள் இந்த வேலை செய்பவை. இதில் வி.எஸ். என்.எல்.

மின்னல் வேகத்தில் மின்னஞ்சல்



வாட் டூ யூ வாண்ட்?
சூ மந்திரக்காளி!

என்கிற விதேஷ் சஞ்சார் நிகாம் லிமிடெட் என்பது மட்டும் அரசுத் துறை நிறுவனம் என்பது பெயரிலிருந்தே புரிந்திருக்கும்.

**Portal & Vortal :** வலை உலகின் நெடும் பாதையின் இருபுறமும் அமைந்திருக்கும் மிகப் பெரிய சூப்பர் மார்க்கெட்கள், ஷோரூம்கள் என இவற்றை முதலில் கற்பனை செய்து கொள்ளுங்கள். rediff.com., 123 India com., yahoo.com என்பன போன்றவை 'போர்ட்டல்'களுக்குச் சிறந்த உதாரணம்.

ஒவ்வொரு 'போர்ட்டலி'லும் செய்திகள், ஷாப்பிங், மெயில், விளையாட்டு, இசை, கல்யாண விளம்பரப் பக்கங்கள், இலக்கியம், சினிமா, ஷேர், சாட் என ஏராளமான சானல் கள் இருக்கும். எது விருப்பமோ, அந்தப் பகுதிக்குச் சென்று தேவையானதைப் பெறலாம்.

ஆனால் இந்த Vortalகள் கொஞ்சம் வேறு ரகம். "அண்ணாச்சி, பேஸ்ட் இருக்கா?" என்று கடைக் காரரைக் கேட்டால்,

"என்ன வேணும்? கோல்கேட்டா, பெப்ஸடென்டா, க்ளோஸ்அப்பா? இல்லைன்னா, மலேஷியா, சிங்கப்பூர் புகழ் கோபால் பல்பொடி வேணுமா?" என்று கடைக்காரர் கேட்கலாமல்லவா?

அது மாதிரிதான் இந்த 'Vortal'கள். இசை, இலக்கியம், கல்வி, விளையாட்டு என ஏதாவது ஒரு துறையில் மட்டுமே உள்ள பல்வேறு சாத்தியங்களைக் கடை விரிப்பவை.

உதாரணமாக varsityonline.com என்பது கல்வி சம் பந்தப்பட்ட ஒரு வர்ச்சுவல் பல்கலைக் கழக வோர்ட்டல். படிப்பு, பாடம், பரீட்சை தவிர வேறு எந்த அனாசார சங்கதி களும் இந்தப் பகுதியில் கிடையாது- பிட் அடிப்பது உட்பட. இது ஒரு கல்வி வோர்ட்டல். இதே மாதிரி உடல்நலம், நிதி சம்பந்தமான ஏரான வோர்ட்டல்கள் வலை நெடுஞ்சாலையில நிறைய உள்ளன.

போர்ட்டல், வோர்ட்டல் எல்லாம் நம்

சௌகரியத் துக்குத்தானே தவிர, வெப் சைட் என்கிற பொதுவான அடைமொழிக்குட்பட்டவையே இவை.

ஆச்சா? அடுத்து இந்த வெப்சைட்டுகளில் இரண்டு விதம் உண்டு. static web site, Interactive அல்லது Dynamic website என்று சொல்வார்கள்.

**Static** ரகம் : இந்த ரக சைட்டுகள், 'என்னைத் தொடாதீர்கள்' என்ற போர்டு மாட்டிய கண் காட்சிக் கூடம் மாதிரி. நாம் பாட்டுக்கு உள்ளே போகலாம்; பார்க்கலாம். ரசிக்கலாம் அல்லது சபிக்கலாம். பிறகு பேசாமல் திரும்பிவிட வேண் டியதுதான். கேள்வி கேட்டு பதில் பெறுவதோ, ஏதாவது பொருள் வாங்குவதோ இயலாது.

**Dynamic Website :** இது ரங்கநாதன் தெருவில் பேரம் பேசி கால் கிலோ கொத்தவரங்காய் வாங்குவது மாதிரி. கீ போர்டு வழியே இதனுடன் பேசலாம்; தேவையானவற்றைக் கேட்டுப் பெற லாம். இசை சம்பந்தமான ஏதாவது ஒரு தளத்தில் நுழைகிறீர்கள் என்றால் அங்குள்ள இசை ஆல்பங்கள், சிடி கேஸட்டுகளைக் கேட்கலாம். வீடியோ வசதி (அதி லேயே) இருந்தால் மருதமலையோ, மாயா மச்சீந்த்ரா வையோ அப்படியே பார்த்தும் ரசிக்கலாம். விலை விவரம் பார்த்து கிரெடிட் கார்டு மூலம் அங்கேயே பணமும் செலுத்திவிட்டால் காலக்ரமத்தில் கூரியரில் சரக்கு வீட்டு வாசலுக்கு வந்து சேரும்.

வலையில் இருக்கும் இந்த ரகப் புத்தக, கேஸட் கடைகள் கணக்குக்கு அகப்படாதவை.

amazon.com போன்ற இணைய புத்தகக் கடைகளில் ஒரு நிமிடத்துக்குச் சுமார் நூறு புத்தகங்கள் விற்பனையாகின்றனவாம்.

வியாபார விஷயத்துக்கு வந்து விட்டோமல்லவா? இதிலும் இரண்டு ரகம். B2B, B2C என செல்லமாகக் குறிப்பிடப்படும் இவற்றின் விரிவாக்கம்: பிஸினஸ்-டு-பிஸினஸ், பிஸினஸ்-டு-கன்ஸ்யூமர்.

B2B என்பது இரு தொழில் நிறுவனங்களுக்குள் நடக்கிற வியாபாரம். உதாரணமாக, ஒரு சக்கரம் தயாரிக்கிற நிறுவ னம், வெப்சைட் தொடங்கி அதன் மூலம் கார் உற்பத்தி நிறுவனங்களுக்கு சப்ளை செய்ய ஆரம்பித்தால் அது B2B.

இதுவே ஒரு கேஸட் நிறுவனம் இணையம் மூலம் ரசிகர்களை இழுத்து மயக்கி, வியாபாரம் நடத்தினால் அது B2C.

இதெல்லாவற்றுக்கும் மூலம் - முகவரி. இணையத்தில் கடை விரிக்கவோ, கண்காட்சி நடத்தவோ, அரட்டை அடிக்கவோ, கடிதமனுப்பவோ - சம்பந்தப்பட்ட நபருக்கு ஒரு இணைய முகவரி தேவை. அதை domain name என் பார்கள்.

இங்குதான் டாட் காம் ஆரம்பிக்கிறது. ஆத்தா, அப்பன் வைத்த பெயர் ஒன்று என்றால், அந்தப் பெயரை இணையத்தில் இணைத்து ஒரு சமாஸ்ரயணம் பண்ணுவது போலக் கடைசியில், '.com' என்றொரு சீல் குத்தி விட்டால் போதும்.

சரக்கு 'நெட்'டேறி விடும்! ●



உங்களுக்கென்று ஒரு சொந்த வெப் சைட் தொடங்க நினைக்கிறீர்கள். உங்கள் கனவு ப்ராஜெக்டான ஊறுகாய் வியாபாரத்தை (என்று வைத்துக் கொள்ளுங்கள்!) உலகமெல்லாம் நடத்த திட்டமிடுகிறீர்கள். ஊறுகாயும் விற்க வேண்டும். உட்கார்ந்த இடத்திலிருந்தும் விற்க வேண்டும். இதற்கு இன்டர்நெட்டை விட்டால் வேறு வழியில்லை என்பது உங்கள் தீர்மானமான முடிவு. ஆகவே, ஒரு சைட், மிக அவசரமாகத் தொடங்கியாக வேண்டும். எப்படிச் செய்வது? இப்படித்தான் :

# நாம ஒரு சைட் போடறோம்!

**Domain Registration :** ஒரு ரப்பர் ஸ்டாம்ப் கடை திறந்தால் கூட 'கனவுக் கன்னி சிம்ரன் ரப்பர் ஸ்டாம்பு' என பெயர் வைப்பதில்லையா? அது மாதிரி டாட்காம் கம்பெனி தொடங்க முதலில் ஒரு பெயர் அவசியம். நம்முடையது ஊறுகாய் வியாபாரமல்லவா? சும்மா வையுங்களேன், 'டேஸ்டி பிக்கில்ஸ்' என்று.

இந்தப் பெயரை முதலில் பதிவுசெய்ய வேண்டும். கல்யாண, நிலப் பதிவாளர்கள் மாதிரி டாட்காம் நிறுவனப் பெயர்களைப் பதிவுசெய்ய டொமெய்ன் ரிஜிஸ்திரார்ஸ் என்று ஒரு வகையினர் இருக்கிறார்கள்.

அவர்களிடம் போய் பணம் கட்டி (ரொம்பக் கொஞ்சம்தான். ஆயிரத்துக்குள்தான் செலவு)

"ஐயா, ஊறுகா யாவாரம் செய்யப் போறனுங்க. நம்முளுத பதிஞ்சிக்கறீங்களா...?" என்று விண்ணப்பித்துக் கொண்டால், இந்தப் பெயரில் வேறு ஏதாவது சைட் ஏற்கெனவே தொடங்கப்பட்டு விட்டதா என்று அலசிப் பார்த்து, பிறகு பதிவுசெய்வார்கள். அதே பெயரில் வேறு யாராவது பதிவு செய்திருந்தால், நீங்கள் பெயரை மாற்ற வேண்டியிருக்கும்.

இந்த 'Domain' என்பதை, உங்களுக்குச் சொந்தமான ராஜாங்கம் என்று அர்த்



தப்படுத்தலாம்.

Website Design : பெயர் பதிவாகி விட்டதா? இனி நீங்கள் செய்ய வேண்டிய தொழில்/வியாபாரத்துக்கு உண்டான பக்கங்களை நிர்மாணித்து வடிவமைக்க வேண்டும்.

இந்த ஜோலிக்காகவே வெப்சைட் டிசைனர்கள் என ஒரு கோஷ்டியார் இருக்கிறார்கள்.

நீங்கள் தர விரும்பும் தகவல்களை, விஷ"வல்களை, வர்த்தக விவரங்களை, இணையத்தில் எப்படி அமைக்கப் போகிறார்கள் என்பதை முதலில் உங்கள் சொந்தக் கணிப்பொறியில் வடிவமைத்துக் காட்டுவார்கள்.

மொத்தம் ஐந்து பக்கங்களை உங்கள் சைட்டில் தரவிருக்கிறீர்கள் என வைத்துக் கொள்வோம்.

வாடிக்கையாளர் உங்கள் சைட்டில் நுழைந்ததும் முதலில் 'Home page' எனப்படும் முதல் பக்கத்தைப் பார்ப்பார்கள். டேஸ்டி பிக்கிள்ஸ். பெயரிலேயே சுவை தெரியும். பக்கத்தில் குண்டோதரன் மாதிரி உங்கள் ஊறுகாய் பாட்டில் படம்.

உங்களைப் பற்றி, உங்கள் ஊறுகாய் வியாபாரம் பற்றி, எப்படி அதை இணையத்தின் மூலம் ஆர்டர் கொடுத்து வாங்குவது என்பது பற்றியெல்லாம் அந்த முதல் பக்கத்தில் இருக்கும்.

அடுத்தப் பக்கத்தில், மாங்காய், எலுமிச்சங்காய், நெல்லிக்காய், கொத்தவரங்காய், வெண்டைக்காய் என நீங்கள் செய்திருக்கும் 199 விதமான ஊறுகாய்ப் புரட்சி பற்றிய விவரங்கள் + விலைகள்.

அடுத்தப் பக்கங்களில் ஆர்டர் பாரம். பூர்த்தி செய்து, கிரெடிட் கார்டு மூலம் பணம் செலுத்தி, எந்த விலாசத்தில் எத்தனை நாளுக்குள் வந்து சேர வேண்டுமென்ற குறிப்புகளையும் தரலாம்.

இப்படி வெப்சைட் தயாரானதும் நீங்கள் வியாபாரத்துக்குத் தயார். உங்கள் சொந்தக் கணிப்பொறியிலிருக்கும் இப்பக்கங்களை அப்படியே தூக்கி இணையத்தில் போட்டு விட்டால் போதும். உலகமெலாம் உங்கள் ஊறுகாய் மணக்கும்!

Site hosting : உங்கள் தளத்தை இணையத்தில் தாக்கல் செய்யவென்றே Hosting Services கம்பெனிகள்

பல உள்ளன. அவர்கள் மீதி வேலையைப் பார்த்துக் கொள்வார்கள்.

இந்தியப் பொருளாதாரத்தின் முதுகெலும்பே உங்கள் ஊறுகாய் வியாபாரம் தான் என்று ஏதாவது ஒரு portal/vortal நிறுவனம் நினைத்தால், உங்கள் சைட்டை, கணிசமான விலை கொடுத்து வாங்கிக் கொள்ளவும் சாத்தியம் உண்டு. பிறகு அவர்களே hosting சடங்கை இலவசமாக நடத்திக் கொடுத்து விடுவார்கள்.



Venture Capital : அருமையான ஊறுகாய் வியாபாரம். லாபம் சிரபுஞ்சி மழை மாதிரி கொட்டப் போவது உறுதி. ஆனால் இத்தனை படி தாண்டி, யார் யார் உதவியையோ பெற வேண்டுமென்றால் அதற்கெல்லாம் பணம்?

கவலைப்படேல். Venture Capital கம்பெனிகள் பல உள்ளன, நாட்டில். புரியும்படி சொல்ல வேண்டுமானால், சினிமா தயாரிப்பாளர்களுக்குப் படமெடுக்க பணம் கொடுக்கும் பைனான்சியர்கள் போல, இணையத் தளங்களை உருவாக்கப் பணம் தரும் பைனான்சியர்கள் இவர்கள். அற்புதமான, வியாபார ரீதியில் நல்ல பலன் தரும் யோசனைகளைச் செயல்படுத்த இவர்கள் கேள்வி கேட்காமல் பணம் தருவார்கள். பல அமெரிக்க நிறுவனங்கள் இப்போது இந்த நோக்குடன் இந்தியாவை வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றன. இவை தவிர பிரசித்தி பெற்ற பல 'போர்ட்டல்'களும் உங்கள் சைட்டைப் பணம் கொடுத்து வாங்கவோ அல்லது கூட்டாக வியாபாரம் நடத்தவோ முன் வருகிறார்கள்.

வியாபாரம் தொடங்கி, நல்லவிதமாக நடக்க, உங்கள் தளத்தைச் சரியாகப் பராமரிக்கும் குழு ஒன்று தேவை.

மளிகைக் கடையையும் பெட்டிக் கடையையும் விரும்பிய நேரத்தில் பூட்டி விட்டு ஊரைப் பார்க்கப் போய் வரலாம். ஆனால் இன்டர்நெட் என்பது இருபத்தி நான்கு மணி நேர, ஆயுட்கால சர்வீஸ்.

## நெட் பிட்ஸ்

***இந்தியாவில் ISP லைசென்ஸ் வாங்கியோர் : 315***

***இயக்கத்திலிருக்கும் ISPகள்: 72***

***(நமக்கு VSNL, SATYAM, MANTRA, DISHNET, BPL தவிர எதுவும் கண்ணுக்குத் தெரியவில்லை.)***

***இன்டர்நெட் சந்தாதாரர்கள்: 8 - 9 லட்சம். இது 2003 வருடத்திற்கு 75 லட்சமாகி விடும் என்கிறார்கள்.***

ஒருநாள் சைட் இயங்காமல் போனால் கூட வாடிக்கையாளர்கள் சுலபமாக உஜாலாவுக்கு மாறி விடுவார்கள், ஜாக்கிரதை!

## பேர் வாங்கலையோ பேர்!

உங்கள் இணையத் தொழில் நிறுவனத்துக்குக் கவர்ச்சியாக, அம்சமாக, கஷ்டப்பட்டு ஒரு பெயர் யோசித்து வைத்திருப்பீர்கள். அதைப் பதிவுசெய்யப் போனால், அதே பெயரில் வேறு யாரோ பதிவு செய்திருப்பதாகச் சொல்லி விடக்கூடும். ஒரு அவசரத்துக்குப் பெயர் அகப்படாமல் அவதிப்படுபவர்களுக்கு உதவவென்றே இணையத்தில் சில சைட்கள் உள்ளன.

இவர்களது வேலையே, எல்லா துறைகளுக்கும் பொருத்தமான, எல்லா தொழில்களுக்கும் பொருத்தமான பெயர்களை யோசித்து, அதைப் பதிவு செய்து வைத்துக் கொண்டு, 'பெயர் வாங்கலையோ பெயர்' என்று கூவிக் கூவி வியாபாரம் செய்வது தான். இவர்களை Cyber squatters என்பார்கள்.

இத்தகைய 'நேம்ஸ் சைட்'டுகளுக்குப் போனால் மளிகைக் கடை முதல் மருந்துக் கடை வரை, இஞ்சின் ஆயில் முதல் இஞ்சி மொரப்பா வரை உங்கள் தொழிலுக்குத் தேவையான பொருத்தமான, கவர்ச்சியான டாட்காம் கம்பெனி பெயர்கள் கொட்டிக் கிடக்கும்.

அவற்றில் உங்களுக்குத் தேவையான, பொருத்தமான, பிடித்த பெயரை 'க்ளிக்' செய்து, கேட்கிற பணத்தை கிரெடிட் கார்டு மூலம் கட்டி விட்டால் நீங்கள் டொமெய்ன் ரிஜிஸ்ட்ராரைப் பார்க்கப் போகிற நேரம் மிச்சம்.

என்ன ஒன்று, க்யூவில் நின்று ரஜினி படத்துக்கு ரிலீஸாகி முப்பது நாள் கழித்து டிக்கெட் முன் பதிவு செய்வதற்கும், பிளாக்கில் வாங்கி முதல் நாளே பார்ப்பதற்கு ஆகும் செலவு வித்தியாசம் தான்!

**இந்திய இணையத்திலிருக்கும் போர்ட்டல்கள்: 2000**

**ஒவ்வொரு ISPக்கும் தற்போது வருமானத்தைவிட 1.5. - 3.0 மடங்கு செலவாகிறது.**

**ஒரு ஒப்பீட்டுக்காக: நம் நாட்டில் சுமார் 20 லட்சம் செல்ஃபோன் நுகர்வோர், 4 கோடி கேபிள் டீவி நுகர்வோர்!**

இணையத்தில் வியாபாரம் தொடங்கி விட்டது. அங்கே, வீட்டு சாமான் கிடைக்கிறது, டீ.வி., வாஷிங்மெஷின் வாங்கலாம், துணிகள், பயண, சினிமா டிக்கெட் கிடைக்கும். வங்கி உண்டு, டெலிபோன் பில் கட்டலாம், விரைவில் மின்சார பில்... இன்னும் எத்தனையோ!

பலசரக்குக் கடைகள், இணையத்தில் பகடியின்றிக் குவிகின்றன. வாடிக்கையாளர்கள் கடைக்குள் நுழைந்து பார்க்கிறார்கள், சிலர் பொருள் வாங்குகிறார்கள், அதற்கான பணத்தைத் தங்கள் கிரெடிட் கார்டு மூலம் செலுத்துகிறார்கள். வாங்கிய பொருட்கள் கூரியர் மூலம் வீடு போய்ச் சேர்கின்றன.

நமது தெருவிலிருக்கும் சூப்பர் மார்க்கெட் கடைகளுக்குக் காவல் உண்டு. பொருள் திருட்டுப் போகாமல் பார்த்துக் கொள்ள காவலாளி, சேல்ஸ்மேன், கேஷியர், சில இடங்களில் கண்காணிக்க க்ளோஸ்ட் சர்க்யூட் டெலிவிஷன் கூட உண்டு.

இணையக் கடைகளில், வங்கிகளில் திருட முடியுமா? பொருளை அமுக்கிச் செல்வது சாத்தியமா?

சில சாத்தியங்கள் உண்டு!

வேறொருவர் கிரெடிட் கார்டு நம்பர், அவருடைய user name, பாஸ்வேர்ட் ஆகியவற்றைத் திருடி, அவர் கணக்கில்



பணம் செலுத்திப் பொருளை அபகரிக்கலாம்!

புத்திசாலியாகப் போலி டெலிவரி ஆர்டர் அனுப்பலாம். இன்டர்நெட் வங்கிக் கணக்கில் கபளீகரம் செய்யலாம். மேல் நாடுகளில் இதுபோன்ற பல சம்பவங்கள் நடந்துள்ளன.

இதைக் கருதி, இன்டர்நெட்டில் பாதுகாப்பு முறைகள் பல உருவாகியுள்ளன.

# வெலக்கு உண்டா வாச்மேன்?

வர்த்தகம் செய்யும் எந்தத் தளமும் முதலில் உங்களை உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளும். அச்சமயம் user name, password



என இரண்டு சம்பிரதாயங்களை முதலில் முடிக்கச் சொல்வார்கள். அதாவது, குறிப்பிட்ட இணையக் கடைக்குள் நீங்கள் நுழைவதற்கு உங்களையே ஒரு ரகசியப் பெயர், சங்கேதக் குறியீடு தரச் சொல்லுவார்கள். அதை நீங்கள் 'டைப்' செய்ததும் பதிவாகி விடும். கடைக்காரர்களுக்கு இது எதற்கு?



நீங்கள் உள்ளே நுழையும் போது உங்களை அடையாளம் கண்டுகொள்ள!

பாஸ்வேர்ட் என்பது, பூட்டியுள்ள கதவைத் திறக்கும் சாவி! அலிபாபாவும் நாற்பது திருடர்களும் படம் நினைவிருக்கிறதா?

'திறந்திடு சீசேம்' என்ற ரகசிய வார்த்தையைச் (code) சொன்னதும் கதவு திறப்பது போல, அடுத்தவரின் பாஸ்வேர்டை நீங்கள் சொன்னாலும் ஸிஸ்டம் உங்களை சிவப்புக் கம்பளம் போட்டு வரவேற்கும்!

ஆக, பாஸ்வேர்டை ரகசியமாக, அதே சமயம் நீங்கள் மறக்காமல் பாதுகாத்து வைப்பது மிகவும் அவசியம். பாதுகாப்பு கருதி சிலர் பாஸ்வேர்டை மாதமொரு முறை மாற்றுவதும் உண்டு! பாஸ்வேர்ட் திருட்டு பற்றி அறியும் முன் யார் இது போன்ற செயலில் ஈடுபடுகிறார்கள் எனத் தெரிந்து கொள்வது முக்கியம்.

எந்த ஒரு இணையத்தளமும் குறிப்பிட்ட பரிமாணங்களோடும் பாதுகாப்புகளோடும்தான் அமைக்கப்படுகிறது. அந்தப் பாதுகாப்பை உடைப்பதை சாதனையாகக் கருதும் சிலர்; அத்துமீறி சைட்டிற்குள் நுழைந்து பொருளையோ, பணத்தையோ திருடி லாபம் சேர்க்க முயலும் சிலர் - இவர்கள்தான் நெட் வில்லர்கள்!

ஒரு வெப் சைட்டிற்கு எப்படிப்பட்ட பாதுகாப்பு அமைக்கப்படுகிறது? வெப் சைட்டை ஒரு வீடு, கடை, ராஜாங்கம் என்று பாவித்தால் அதைச் சுற்றி வேலி அமைப்பது போல சிஸ்டம் முழுவதும் மூடப்பட்டு, உள்ளே வர ஒரு கதவு மட்டுமே வைக்கப்படுகிறது. அதுவும் ராஜா காலத்து அகழிகளை நினைவுகூறும் நெருப்புச் சுவர்! அந்தச் சுவர், சாப்ட்வேர், ஹார்ட்வேர் என எதுவாகவும் இருக்கலாம்! அதனிடம் இந்த அமைப்பிற்குள் யாருக்கு நுழைய அனுமதி உண்டு, யார் யாருக்கு அனுமதி இல்லை என்று விவரம் கொடுத்து விடுவார்கள். அவர்களை மட்டுமே அடையாளங் கண்டு உள்ளே வர அனுமதிக்கும். அதுவும் ரகசியப் பெயர், சங்கேதச் சொல் சரியாகக் கொடுத்தபின்.

உதாரணமாக அமெரிக்காவின் ராணுவ வலை தளம் பென்டகனுக்கு சீனா அல்லது இந்தியாவிலிருந்து யாரும் தொடர்பு கொள்ள முடியாது. அப்படி ஒருவர் தொடர்பு கொள்ள முனைந்தால், வரும் சிக்னலிலேயே அடையாளம் கண்டு அனுமதி மறுத்து விடும், பென்டகன் சைட்.

முதல் வகையான அத்து மீறல்: வேறொருவரது ரகசியப் பெயர், சங்கேதச் சொல்லைத் தெரிந்து கொண்டோ, திருடியோ 'அவராக' உள்ளே நுழைவது.

இரண்டாவது வகை, இந்த நெருப்புச் சுவரையே உடைத்துக் கொண்டு நுழைவது! சிஸ்டத்தின் மற்ற இடங்களில் எது பலவீனம் என்று பார்த்து அதை உடைத்து நுழைவது.

- சில அமெரிக்க இணையத் தளங்கள் தங்கள் பாசறையைத் தகர்ப்பதாக சவால் விட்டு வெற்றிகரமாக உள்ளே நுழையும் தீவிரவாதிகளுக்குப் பெரும் பரிசு தருகிறார்கள்!
- இந்திய ராணுவத்தின் வெப்சைட்டின் முதல் பக்கம் (Home page) கார்கில் போர் நடந்த சமயம் பாகிஸ்தானியர்களால் உருமாற்றம் செய்யப்பட்டு விட்டது! பிறகு அதைக் கண்டுபிடித்து சரிசெய்து விட்டார்கள்.





இதுபோல், அத்துமீறி நுழைவதைத்தான் 'Hacking' என்பார்கள். 'Hackers' எனப்படும் இவர்களுக்கென ஒரு 'கிளப்'பே இருக்கிறது. இந்த இணையத் தீவிரவாத கும்பலில் முக்கால்வாசிபேர் 14 - 19 வயதுக்காரர்கள் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இவர்கள் 'சுவர் தகர்ப்பு'க்கென்று தனியே சில கருவிகளையே (tools) வைத்திருக்கிறார்கள்.

சுவர் தகர்த்து உள்ளே நுழைந்து 'வைரஸை' (virus) அவிழ்த்து விட்டால் அது அந்தக் கணிப்பொறியில் அல்லது நெட்வொர்க்கிலுள்ள எல்லா ப்ரோக்கிராமையும் நாசமாக்கி விடும்! இந்த வகையில் சமீபத்தில் வலை தளத்தில் விளையாடி அழ விட்ட 'I love you' வைரஸை

அறியாதவர்கள் இருக்க முடியாது!

இந்த இணையத் தீவிரவாதிகளில் பல வகை உண்டு.

● சாதுவானவர்கள் : 'Hack' செய்யும் 'த்ரில்லு'க்காகச் செய்பவர்கள்.

● அனுமதியின்றி நுழைந்து மற்றவரது கிரெடிட் கார்டில் பொருள் வாங்குவதோ, போலி டெலிவரி ஆர்டர் மூலம் பொருளை அபேஸ் செய்வதோ, மற்றவர் வங்கிக் கணக்கில் கை வைப்பதோ - என லாபம் தேடுபவர்கள்.

● வாடகைத் திருடர்கள் : ஒருவரால் நியமிக்கப் பட்டு, இந்தக் கம்பெனியின் ரகசியத்தைக் கொண்டு வா, இந்திய ராணுவத்தின் ரகசியங்களைத் தட்டி வா என அனுப்பப்படுவார்.

● மிகவும் பிரபலமான சைட்டை Hack செய்து உலக அளவில் 'பேரும் பெருமையும்' தேடிக் கொள்ள நினைப்பவர்கள். சமீபத்தில் 'Yahoo.com' தளத்தில் இத்தகைய அத்துமீறல் நடந்தது.

● 'எங்கள் சைட்டிற்கு பலத்த பாதுகாப்பு உள்ளது. கண்டவர் நுழைய முடியாது' என்று சவால் விடும் சைட்டிற்குள் நுழைந்து மூக்குடைப்பவர்கள்.

என்ன, சிரிப்புத் திருடன், பிக்பாக்கெட், கடத்தல்காரன் என்று வரிசைப்படுத்துவது போல் உள்ளதா... அப்படியேதான்!

நெருப்புச் சுவர் ஒரு பக்கம் இருக்க, இதுபோன்ற அத்துமீறி நுழைதலைச் 'சட்'டெனக் கண்டுகொள்ள மற்றுமொரு பாதுகாப்பு முறை உள்ளது. அதுதான் Intrusion Detection System (IDS).

தமிழ்ப் படங்களில் கடத்தல்கார பாஸ் காட்டு பங்களாவில் அரண் அமைத்திருப்பான். வெளி ஆள் யார் நுழைந்தாலும் சிவப்பு, பச்சை பல்ப் மாறி மாறி எரியும்; அல்லது உய்உய்யென்று அலாரம் ஒலிக்கும். "பாஸ் நம்ம எதிரி எவனோ வர்றான்!" என்று மொட்டை வில்லன் சொல்வது போல் இந்த IDS சிக்னல் கொடுக்கும்.

நிர்மாணிக்கும்போது அதனிடம் கொடுத்த உத்தரவுகளின்படி, தேவைப்பட்டால் பாதுகாப்பிற்காக மொத்த சிஸ்டத்தைக் கூட நிறுத்திவிடும்.

அதோடு, வைரசை அழிக்கும் எதிர்வைரஸ் மென்பொருட்களும் உண்டு.

இத்தனைக்கும் 'டேக்கா' கொடுக்கும் 'ஹாக்கர்ஸ்' பெருகிக் கொண்டே இருக்கிறார்கள். புதிய பாதுகாப்பு முறைகளும் தோன்றியபடி உள்ளன. இது கம்ப்யூட்டர்-டு-கம்ப்யூட்டர் தாக்குதல் என்பதால் விரைவில் எந்த கம்ப்யூட்டர் தாக்குதலை அனுப்புகிறதோ அதைக் கண்டுபிடித்து, ஏவுகணை ஒன்றை அனுப்பி அதை மட்டும் நாசமாக்கும் அளவிற்குப் பாதுகாப்பு முறைகளை எதிர்பார்க்கலாம்!

நாலுநாள் அரசுமுறை சுற்றுப் பயணமாக பூலோகத்துக்கு வந்த நாரதர், கடை கண்ணியெல்லாம் மூடியிருப்பதைக் கண்டு சலிப்படைந்தார். 'சே, இந்த மக்களுக்கு மாதமொரு பந்த் நடத்தாவிட்டால் மண்டை வெடித்து விடும் போல'.

என்னடா இது சோதனை என்று தமது தம்பூராவுக்கு ஒரு தந்தி வாங்கும் பொருட்டு பாண்டிபஜார், வால்ஸ்ட்ரீட், டவுனிங் தெரு, செரங்கூன் வீதி, அஜ்மல்கான் வீதியெல்லாம் சுற்றி வந்தவர், பெரிய பெரிய கடைகளெல்லாம் பூட்டப்பட்டு, 'வாடகைக்கு விடபடும்' என்று எழுத்துப் பிழையுடன் போர்டு தொங்கக் கண்டார்.

விடை புரியாமல் மேலும் மிதந்து திருநெல்வேலிப் பக்கம் போனவர் அங்கு மிளகாய் மண்டி நடத்தும் கந்தசாமிப் பிள்ளையைச் சந்தித்தார்.









# வாழவைக்கும் வர்த்தகம்

"என்ன பிள்ளைவாள்! பூலோகத்தில் ஷாப்பிங் காம்ப்ளக்ஸெல்லாம் இழுத்து மூடியிருக்கிறதே! என்ன சமாசாரம்?" என்று நாரதர் கேட்டார்.

கந்தசாமிப் பிள்ளை ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

"அட போமய்யா! இப்பம் எவன் கடை திறந்து வெச்சி யாவாரம் பாக்கறாங்கறேன்? பகடி கொடுத்து இடத்தை வாங்கி, ஆளைப் போட்டு, வேலை பார்த்து, காசு பணம் கொடுத்து லைசென்ஸ் வாங்கி... இதுல ஹோல்ஸேலர், ரீடெய்லர், சரக்கு கொடோன், அங்கேருந்து எடுத்து வர ஆகற செலவு, மண்ணாங்கட்டின்னு எத்தனை வியர்த்தம்! நான்கூட சின்னதா ஒரு பொட்டி வாங்கிடலாம்னு இருக்கேன்!"

"பொட்டியா!" என்றார் நாரதர்.

"ஆமய்யா. பொட்டிதான். கம்ப்

யூட்டர் பொட்டி. அதுக்கு ஒரு இன்டர்நெட் கனெக்ஷன் குடுத்துட்டு, கம்பெனி பேரைப் பதிஞ்சி வெச்சிட்டா போதும். இனி மிளகா வத்தல் யாவாரத்தை e-comலதான் நடத்தப் போறேன்."

''என்னய்யா சொல்றீரு? கடைய நீங்களும் மூடிடப் போறீங்களா?"

"பின்ன! தூசு நெடி, வேர்வைக் கசகசப்பு, பேரம் பேசற தொந்தரவு, போலீசுக் காரன் மாமூலு எதுவுமில்லாம, ஹாயா பொட்டிய வைச்சிக்கிட்டு யாவாரம் செய்யப் போறேன்!"

"என்ன பொட்டி? ஒண்ணும் விளங் கலையே?"

''நாரதரே! இன்டர்நெட்டு எதுக்கு உருவாச்சு தெரியுமா?"

"எதுக்கு?"

"முக்கியமா பிஸினஸுக்காகத்தான்."

"அதுக்காக வெள்ளைக்காரன் பொட் டில மிளகா வத்தல் வியாபாரமா!"

"எவன் சொன்னான் வெள்ளைக்காரன் பொட்டின்னு? பொட்டி வேணா அவன் கண்டுபிடிச்சதா இருக்கலாம். ஈ காமர்ஸ்ங் கறது உலகத்துக்கே பொதுவானது. உம்ம நாராயணன் மாதிரி."

''புரியற மாதிரி சொல்லும் பிள்ளை வாள்!"

"இன்னமே யாவாரம்னா கடை போட் டுக் குந்தனும்னே இல்லை. இன்டர்நெட்டுல நம்ம கம்பெனிய ஏத்தி உட்டுட்டா போதும். நம்ம சரக்கு என்ன? எப்படிப் பட்டது. வெலை என்ன, ரகம் என்ன, எப்படி வாங் கறதுன்னு தகவல் தந்துட்டா அது காத்தோட போயி உலகம் முழுக்க உள்ள கம்ப்யூட்டர் பொட்டிங்கள்ல குந்திக்குமாம்."

"நெசமாவா?"

''நெட்டு கனெக்ஷன் உள்ள எந்தப் பொட்டிலேருந்தும் நம்ம கடைக்கு தொடர்பு கொள்ளலாம். பேரம் பேசலாம். யாவாரம் முடிஞ்சா, கூரியர்ல சரக்கை அனுப்பிட வேண்டியதுதான்."

"என்னென்ன வியாபாரம் செய்யலாம்?"

"என்ன வேணா! இதுல ஒரு விசேஷம் என்னன்னா, விக்கறவனுக்கும் வாங்கற வனுக்கும் நடுவுல தரகனுங்க கிடையாது. ரெண்டு பேருக்குள்ளியே டீலிங் முடிஞ் சிடும்."

"புரியலியேப்பா."

"நீ என்ன தேவலோகவாசி, போ! விளக் கமா சொல்றேன். இப்ப மம்மி டீவின்னு ஒரு டீவி பொட்டி தயாரிக்கற கம்பெனி இருக்குதுன்னு வெச்சிக்க."

"சரி, வெச்சிக்கறேன்."

''அவன் தனக்கொரு வெப்சைட் தொடங்கி, நான் இன்னாரு. என் அருமை பெருமை இன்னது; டீவி பொட்டி விக்க றேன். இந்தப் பொட்டி நீடிச்சி உழைக்கும். கலர் படமெல்லாம் பிரமாதமா வரும். இத் தினி சேனல் வசதி இருக்குன்னு எல்லாம் சொல்லி, தன் சரக்கை 'நெட்'டுல ஏத்த றான்."

"சரி."

"டீவி பொட்டி வாங்கி விக்கலாம்னோ, அல்லது ஒரே ஒரு டீவி, வீட்டுக்கு வாங்க லாம்னோ நினைக்கறவன், மம்மி டீவி சைட் டுக்குப் போறான். அங்க ஃபுல் டீடெயில்ஸ் இருக்கு. டீவியும் அவனுக்குப் பிடிச்சிருக்கு. சரிதான், நாம நூறு டீவி வாங்கினா விலை குறைச்சுத் தருவானே; நாம வாங்கி விக்கலாமேன்னு நினைக்கறான்...

"சரி, நினைக்கட்டும்."

"என்ன செய்வான்? மம்மி டீவிகாரன் ஒரு ஆர்டர்ஃபாரம் குடுத்திருப்பான்."

"பிரிண்டு பண்ணியா?"

"சுத்த வெவரங்கெட்ட ஆளுய்யா நீர்! தன் சைட்லெயே ஒரு ஃபாரம் வெச்சிருப் பான். அங்க போயி இவன் நிரப்பி, தன் கிரெடிட் கார்டு நம்பரையும் குடுத்தான்னா போதும். உடனே மம்மி டீவிகாரன் 'ஆர்டர் வந்துருச்சி, ஆசையில் ஓடி வந்தேன்'னு குதிக்க ஆரம்பிச்சிடுவான்...'

"அப்புறம்?"

''உடனே அவன் தன் கொடோன் லேருந்து நூறு டீவிங்களை, கொரியர் கம் பெனி மூலம் சம்பந்தப்பட்ட ஆசாமிக்கு அனுப்பிடுவான்."

"அதாவது, ஒரு மொத்த வியாபாரி, சிறு வியாபாரிக்கு இப்படி சரக்கு அனுப்ப லாங்கற..."

''சிறு வியாபாரிக்குத்தான் அனுப் பணும்னு இல்லை. நேரடியா கஸ்டமருக்கும் இப்படியே சப்ளை செய்யலாம்."

"ஆச்சரியமா இருக்கே!"

"ஆச்சரியப்படாதீர் நாரதரே! இன்னிக்கு உலகமே இந்த 'e.com'ங்கற எலக்ட்ரானிக் வர்த்தகத்துலதான் இயங்கிட்டிருக்கு. அமெரிக்காவல ஒரு பெரிய பொம்மைகள் சூப்பர் மார்க்கெட் இதைப் பார்த்ததும், தன் கடையை மூடிட்டு, நெட்டுல யாவாரம் ஆரம்பிச்சி செமை பிஸினஸ் நடக்குது."

"ஐயோ?"

"ஒரு கடை போட்டா அந்த ஏரியாவுல

மட்டும் தானே பிசினஸ்? இன்டர்நெட்டுன்னா, உலகம் முழுக்க பிசினஸ் ஆச்சே சுவாமி! நம்ம திருநவேலி அல்வாவை இந்த e.com மூலம் இறக்கினா, தேவலோகத்துல கூட சப்ளை கிடைக்கும் பாரும்!''

"நிஜமாவா சொல்ற?''

"உம்மகிட்ட டூப் அடிக்க எனக்கென்ன ஆசை? நெட் மூலம் வியாபாரம் செய்யறதால நடைமுறைச் செலவுகள் எல்லாம் குறையுது. அதனால பொருட்களோட விலையையும் குறைச்சு விற்க முடியுது. அதனால வியாபாரம் அமோகமா நடக்குதாம்.''

''என்னென்ன பொருள்கள் நெட்டுல வியாபாரமாகுது?''

"என்ன விற்கலைன்னு கேட்டா வேணா சொல்ல முடியும். ஜெட் விமானங்கள்லேருந்து வீரிய சக்தி லேகியம் வரைக்கும் கண்டவன் கடை விரிச்சிருக்கான்.''

"அது சரி. கிரெடிட் கார்டு வசதி இல்லாதவன் இங்க பொருள் வாங்க முடியாதுங்கறது கஷ்டம் இல்லியா?''

"கஷ்டம்தான். இன்னொரு வழி இருக்கு. இன்டர்நெட் வியாபாரத்துக்காகவே நெட் பாங்க்ஸ் திறந்திருக்காங்க. நம் ஊர் ICICI, சிடி பாங்க் எல்லாம்கூட நெட் பாங்க் திறந்திருக்காங்க. அந்த வங்கில கணக்கு வெச்சிக்கிட்டா, பொருளை எனக்கு அனுப்பிடு. பணத்தை இன்ன பாங்க்ல எடுத்துக்கன்னு சொல்விடலாம்.''

"எல்லாம் சரி. பொருள் வாங்கறே. கிரெடிட் கார்டு நம்பரைக் குடுக்கறே. ஆனா, பொருள் வந்து சேரலைன்னா?''

"நீரும் உம்ம சந்தேகமும்! பொருள், வாங்கறவன் கைக்குப் போய்ச் சேர்ந்த ரசீது கிடைச்சாத்தான் கிரெடிட் கார்டு கம்பெனி ரூபாயை கடைக்காரன் கணக்குல கட்டுவான்.''

"கேக்க நல்லாத்தான் இருக்கு. ஆனா யோசிச்சுப் பாரு. நம்ம மக்கள் கால் கிலோ வெண்டைக்காய் வாங்கினா, அதுல பத்து காயை முனை உடைச்சுப் பார்த்து வாங்கறவங்க. நமக்கு எப்படிய்யா இந்த நெட்டு வியாபாரமும் குட்டு வியாபாரமும் சரிப்படும்?''

"கரக்டுதான் நாரதரே! வியாபாரி - பொதுமக்கள் நேரடி வியாபாரம் இந்தியாவுல இப்போதைக்கு சூடு பிடிக்கலைங்கறது உண்மைதான். ஆனா, வியாபாரி டு வியாபாரி பிசினஸ் பிரமாதமா போவுதாம். ஒரு தொழிற்சாலைக்கு வேண்டிய உதிரி பாகங்கள், கெமிக்கல்கள்... இந்த மாதிரி பொருட்களை - முதலாளிக்கு முதலாளி நேரடியா விக்கற, வாங்கற பிசினஸ் நம்மூர்ல சக்கை போடு போடுதுன்னு சொல்றாங்க.''

"என்னமோ பிள்ளைவாள்! உலகம் எங்க போயிட்டிருக்குன்னே புரியலை. இப்போதைக்கு என் தம் பூராவுக்கு ஒரு தந்தி கிடைக்குமா உன் இன்டர்நெட்லே?''

"தாராளமா கிடைக்கும். ஆனா ஒரே ஒரு மீட்டர் தந்தி கேட்டா கிடைக்காது. கிலோமீட்டர்ல கேளுங்க.''

"ஆளை விட்றா சாமி!''

நெஞ்சில் நிறைந்த பொன்மனச் செம்மல்

எம்.ஜி.ஆர். வரலாறு



# மிரட்டும் வேகம் மின்னல்

“முன்பெல்லாம் காப்பிக் கொட்டையை வறுத்து, வீட்டிலேயே அரைப்பார்கள். பிறகு அதற்கு மெஷின் வந்து விட்டது. ஆட்டுரலிலிருந்து கிரைண்டருக்கு மாறிய காலம் இன்னும் யாருக்கும் மறந்திருக்காது. அதே போலத்தான், மீடியாவின் அடுத்தக்கட்ட வளர்ச்சியாக இன்டர்நெட் வந்திருக்கிறது. கிரைண்டரில் மாவரைக்கக் கற்றுக் கொள்ள வேண்டியது எப்படி அவசியமானதோ, அதே போல் இன்டர்நெட் பயில்வதும் ஒருவித கட்டாயமாகிறது இன்று'' என்கிறார், 'அம்பலம்' இணைய இதழ் ஆசிரியர் திருப்பூர் கிருஷ்ணன். தமிழ்ப் பத்திரிகை உலகிலிருந்து (25 ஆண்டுகள் தினமணியில்!) இணையப் பத்திரிகைக்குச் சென்ற முதல் பத்திரிகையாளர் கிருஷ்ணன்தான்.

இன்டர்நெட்டில் பிராந்திய மொழிப் பத்திரிகைகள் பரவலாக வரத் தொடங்கியிருக்கின்றன என்றாலும் இவை யாருக்காக நடத்தப்படுகின்றன என்கிற கேள்வி, அந்தந்தப் பத்திரிகை நிர்வாகிகளுக்கே இன்னும் திராமலிருப்பது, இணைய இதழ்களில் வரும் விஷயங்களை மேலோட்டமாகப் பார்த்தாலே புரியும்.

கொஞ்சம் சமகாலச் செய்திகள், சிறுகதைகள், கட்டுரைகள், கவிதை, சினிமா என்று கவனம் செலுத்தும் விஷயங்கள் ஒன்றே போலிருப்பினும் அவற்றின் தரம் (அல்லது கனம்) அலை பாய்ந்து கொண்டே இருக்கின்றன.

“ஆனால், நாங்கள் மிகத் தெளிவாக இருக்கிறோம். எங்கள் வாசகர்கள், (கோமல் சுவாமிநாதன் நடத்திய) சுபமங்களா, தினமணி, கல்கி, ஹிந்து ஆகிய பத்திரிகைகளின் வாசகர்களுக்கு ஒப்பான

வர்கள். அதாவது, கனமான விஷயங்களை சுவாரசிய மாகச் சொல்லவேண்டுமென்று எதிர்பார்க்கிறவர்கள் இந்த சூட்சுமம் புரிந்து, புறநானூறு முதல் புதுக்கவிதை வரை, புதுமைப் பித்தன் முதல் இன்றைய இளைஞர்கள் வரை எல்லா தரப்புப் படைப்புகளையும் வழங்குகிறோம். சினிமா செய்திகள் கூட



# செய்திகள்!

கண்ணியமான முறையிலேயே எழுதப்படுகின்றன'' என்கிறார் கிருஷ்ணன்.

கடல் கடந்து வாழும் தமிழர்கள், ஓரிரு தலைமுறை தாண்டி அங்கேயே நிரந்தரமாகக் குடியேறிவிட்டவர்கள் சங்க இலக்கியங்களையெல்லாம் விரும்பிப் படிக்கிறார்கள் என்கிறார் இவர்.

''இன்டர்நெட் பரவலானால் அது பத்திரிகைத் துறையை, பதிப்புத் துறையை அழித்துவிடும் என்று சொல்வது வெறும் அபத்தம். உண்மையில் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டி நூல்களைத் தேடிச் செல்ல வைப்பதில் இணையம் செய்யும் சேவை மகத்தானது!'' என்கிறார்.

'அம்பலம்' இதழில் தொடர்ந்து வெளியாகும் நூல்



**''பாரு வித்வான் எப்படி பையனுக்கு ஸ்டைலா ஸ்ருதிப் பெட்டி மாட்டிட்டார்!''**

**''யோவ் அது ஸ்ருதிப்பெட்டி இல்லை! லாப்டாப் கம்ப்யூட்டர்! அவன் சா∴ப்ட்வேர் இஞ்சினியர்!''**

**– மாதுரி**

மதிப்புரைப் பகுதியில் இடம் பெறும் நூல்களை என்.ஆர்.ஐ. வாசகர்கள் வாங்க விரும்பினால், தாமே வாங்கி அனுப்ப ஏற்பாடு செய்வதாகக் கூறுகிறார் கிருஷ்ணன்.

''இருபத்தைந்தாண்டு பத்திரிகை அனுபவத்துக்கும் இந்த ஒன்றேகால் ஆண்டு இணைய இதழ் அனுபவத்துக்கும் பெரிய வித்தியாசமாக எதைக் காணுகிறீர்கள்?''

''மிரட்டும் வேகம்தான். தினசரிகளை விடவும் இது வேகம் மிக்கது. காலை ஆறேமுக்கால் வானொலிச் செய்தியில் குன்னக்குடிக்கு விருது கிடைத்திருக்கிற செய்தி கேட்கிறேன். உடனே அலுவலகம் வந்து கட்டுரை தயாரிக்கச் சொல்கிறேன். பிறகு ஒரே ஒரு விநாடிதான். மின்னலாக உலகம் முழுவதும் அது சென்றடைந்து விடுகிறது. செய்தி காதில் விழுந்த சில நிமிடங்களிலேயே அதன் பின்னணி, முன்னணி விவரங்களைப் பெறும்போது வாசகர்கள் அடையும் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் சாதாரணமானதல்ல! அதுவும் 'கரண்ட் நியூஸ்' தருவதில் மற்றெந்த இணைய இதழ்களை விடவும் அம்பலம் முன்னணியில் நிற்பதில் எனக்குப் பிரத்தியேக சந்தோஷம்!''

இன்டர்நெட் பத்திரிகைகளில் ஒரு சௌகரியம் இருக்கிறது. செய்தி 'லோட்' ஆகிவிட்ட பிறகும் ஏதாவது தவறு, அல்லது எழுத்துப்பிழை இருக்குமானால்– அல்லது புதிதாக ஒரு விஷயம் சேர்க்க வேண்டுமானால் அதைச் செய்வது மிகச் சுலபம்.

உதாரணமாக குப்புசாமி என்கிற பெயர் குப்பைசாமி என்று அச்சாகிவிட்டதென்று வைத்துக் கொள்ளுங்கள். இதை யாராவது ஒரு வாசகர் சுட்டிக்காட்டி ஈமெயில் அனுப்பினால், மறு விநாடி, உட்கார்ந்த இடத்திலிருந்தே பிழையை சரிசெய்து விடலாம். ஈ மெயில் அனுப்பிய வாசகர் மறுபடி பார்த்தால், குப்புசாமி, குப்பை களைந்து சமர்த்தாக வந்து சேர்ந்திருப்பார்.

''சுஜாதா சொல்லுவார், பத்திரிகைகளுக்கு ஒரு ப்ரூப் ரீடர். நமக்கு உலகெல்லாம் ப்ரூப் ரீடர்கள் என்று!''

சிரிக்கிறார் கிருஷ்ணன்.

''இணையப் பத்திரிகை நடத்தும் நீங்கள் உங்கள் ஆண்டுமலரை ஏன் அச்சு வடிவில் வெளியிட்டீர்கள்?''

''கடல் கடந்து வாழும் தமிழர்கள் பயன்படுத்துமளவுக்கு இங்குள்ளவர்கள் இன்டர்நெட்டை உபயோகிப்பதில்லை. இதன் வீச்சும் வேகமும் அத்தியாவசியமும் முக்கியத்துவமும் இன்னும் இங்கு முழுதாக உணரப்படவில்லை என்றே நினைக்கிறேன். நம் மக்களுக்கு இதைப் பரவலாக, இன்னும் தீவிரமாக அறிமுகப்படுத்த வேண்டித்தான் அவர்களுக்குப் பரிச்சயமான அச்சு வடிவில் ஆண்டுமலரை வெளியிட்டோம்!''

''உண்மையைச் சொல்லுங்கள். இணைய இதழ் நடத்துவது லாபகரமானதா? உங்களுக்கு வருமானம் எப்படி வருகிறது?''

''இப்போது வருமானம் கிடையாது என்பதுதான் உண்மை. விளம்பர வருமானமெல்லாம் மிகச் சொற்பம். சிலர் ஈ.காமர்ஸ் மூலமும் பலர் பிரவுசிங் சென்டர் நடத்தியும் தான் சம்பாதிக்கிறார்கள். இந்தத் துறையின் நிஜமான வருமானம் என்ன என்று கணிக்க, இன்னும் கொஞ்ச நாளாகும். இந்த 'நெட் கல்சர்' பரவலானபின் சந்தா கட்டிப் படிக்கும்படி வாசகர்களைத் தூண்டலாம். இது நடைமுறைக்கு ஒத்து வருகிறதா என்று பார்க்கச் சில காலமாகலாம். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. சரஸ்வதி தேவி வீணைக்கு பதிலாகக் கம்ப்யூட்டரை மடியில் வைத்துக் கொண்டு விட்டாள்!''

# இன்னும் ஒரே பிரச்னை!

இன்னும்
அதே வேகத்தில்தான்
அத்தை வீட்டிற்குப் பயணிக்கும்
நத்தை!

பதுங்குவது பாய்ச்சலுக்கெனும்
பழமொழிக்குள் அடங்கிவிடும்
புலியின்
பரம்பரைக் குணம்

மீறிக் கொண்டேயிருப்பவன்
மனிதன்!
கடலைப் போலன்றிக்
கரையை மீறும் அவன் கனவு

விண்ணைத் தாண்டி
விரைந்து துழாவும்
அவன் விரல்கள்

தொலைபேசியில் தொடங்கியது
அவன்
தூதுப்படலம்

குளோனிங் முதல்
ஜீனோம் வரை
அவன்
கடவுளின் குடியிருப்புக்கே சென்று
கதவு தட்டுகிறான்

என்றேனும் ஒருநாள்
படைக்கத்தான் போகிறான்
இன்னொரு பூமி

காதலியின் முத்தம் முதல்
கண்டுபிடிப்புகளின் ரகசியம் வரை
எதுதான் கிடைக்கவில்லை
இணையத்தில்?

புராதன
முதுமக்கள் தாழியிலிருந்து
பொத்தான்களின் நகரத்திற்குப்
பிரயாணித்து விட்டான் மனிதன்

இனி இருப்பது
ஒரே பிரச்னை
'எப்படி இறந்து போவது?'

— நா.வே. அருள



'என்னைப் படிக்க உன்னிடம் இன்ன தமிழ் அச்செழுத்து (font) இருக்கிறதா?' என்று எல்லாமே ஒரே முதல் கேள்வி கேட்கும். அது இல்லாது போனாலும் பிரச்னையில்லை. இன்டர்நெட்டை வாழ வைத்துக் கொண்டிருக்கும் ஜாவா என்னும் மென்பொருள், வலை வீதியில் அமானுஷ்யமாகத் திரிந்து கொண்டிருக்கும் எத்தகைய



ஆறாந்திணை, அம்பலம், திண்ணை, தமிழ் சத்யம் ஆன்லைன், வெப் உலகம் - இதெல்லாம் வலையில் உலாவரும் தமிழ்ப் பத்திரிகைகள். இவை தவிரவும் சில பல தமிழ்க் குரல்கள் உண்டு. ஆனால் பத்திரிகை என்கிற வரையறைக்குள் வராவிட்டாலும் அதே சமயம் கல்யாணப் பத்திரிகை அளவுக்குப் போய் விடாமலும் உலகமெலாம் தமிழ் 'ஒளி'க்கச் செய்யும் சேவையில் இணையத் தமிழ் வாசல்கள் விரியத் திறந்திருக்கின்றன.

# உலகமெலாம்

இப்போதைக்கு இந்தப் பத்திரிகைகள் எது ஒன்றைப் படிக்கவும் காசு கொடுக்கத் தேவையில்லை. இன்டர்நெட் வசதி இருந்தால் போதும். (இவை வளர்ந்து, இன்னும் பிரபலமாகி, நிறையப் பேர் படிக்க ஆரம்பித்து விட்டால் சந்தா கட்டித்தான் படிக்க வேண்டி வரும்!) டபிள்யூ டபிள்யூ டபிள்யூ. இன்ன பத்திரிகை டாட்காம் என்று முகவரிக் கட்டத்தில் தட்டினால் டொட்டடொய்ங் என்று இதழ் விரிந்து விடும்.

வேர்ட் ப்ராசஸர் மென்பொருளையும் தாற்காலிகமாக நமது கணிப்பொறிக்குள் இழுத்துக் கொள்ள வழி செய்யும்.

இப்போதெல்லாம் எல்லா இணையப் பத்திரிகைகளும் தங்களுக்கான தமிழ் ஃபான்ட்களைத் தாங்களே சல்லிசாகக் கொடுக்கின்றன. ஒரு 'க்ளிக்'கில், திரையில் ப்ரெஞ்சு, ஜெர்மன் மாதிரிக் குவிந்திருக்கும் புரியாத



எழுத்துக்கள் கன்னித் தமிழாக மாறிக் கண் சிமிட்டும்.

இந்த வலை இதழ் கலாசாரம் வந்த புதிதில் நெட்டில் பயங்கரப் போக்குவரத்து நெரிசல் இருந்தது. நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு வாசகர்கள் பத்திரிகைகள் பக்கம் படையெடுக்க, முதலில் லைன் கிடைக்காமல், கிடைத்தால் சைட் கிடைக்காமல், அதுவும் கிடைத்தால் டவுன்லோட் ஆகாமல் – படாதபாடுபடுத்தி விடும்.

இப்போது வி.எஸ்.என்.எல். தொடர்பு உட்படப் பலதும் மிக எளிமையாகி விட்டன. விநாடி நேரத்தில் எல்லா பத்திரிகைகளையும் ஒரு பார்வை மேய்ந்து விட்டு வந்து விடலாம்.

இணையத்தில் வந்த முதல் தமிழ்ப் பத்திரிகை, ஆறாம்திணை (www.aaramthinai.com) இது சென்னை ஆன்லைன் போர்ட்டலின் தமிழ்க் குழந்தை. ஆசிரியர் பெயர் அப்பண்ணசாமி.

கலை, இலக்கியம், சமூகம், புத்தக விமர்சனம், பேட்டிகள், சினிமா, கவிதை, அது இது வென்று ஒரு அடி ஸ்கேல் உயரத்துக்குப் பிரிவுகள் உள்ளன. எது வேண்டுமோ, விருப்பமோ – அந்தப் பகுதிக்குச் சென்றால் இன்னொரு ஒரு அடி ஸ்கேல். திகட்டத் திகட்டத் தகவல்கள்.

தமிழ்!

ஆறாம்திணையின் சிறப்பம்சங்கள் இரண்டு.

1. ஏனைய நெட் இதழ்களைக் காட்டிலும் இதில் எழுத்துப் பிழைகள் குறைவு.

2. இதில் இடம் பெறும் பேட்டிகள் விரிவாகவும், விவகாரமாகவும் சுவாரசியமாகவும் இருக்கின்றன. பெயர் அறிந்து, முகம் அறியாத பல முக்கியஸ்தர்களின் புகைப்படங்களை வெளியிட்டு, மிக விரிவான பேட்டிகள் அல்லது கருத்துத் தொகுப்பு தரும் 'திட்டி வாசல்' என்கிற பகுதி திணையின்

நட்சத்திர சானல்.

மற்ற தமிழ் சைட்டுகளில் இன்னும் வீரியம் பெறாத தேடுதல் (search) வைபவத்தை இதில் ஜாம்ஜாமென்று செய்யலாம். விரும்பிய எழுத்தாளர்கள், படைப்புகள், கதை - கவிதை - கட்டுரைகளைத் தேடிப் பார்க்கலாம்.

தினச் செய்திகளும் உண்டு என்றாலும் விரிவான அரசியல் கட்டுரைகள் எனும் கலாசாரம் இன்னும் நெட் ஏறவில்லை. (இந்த விஷயத்தில் அநேகமாக எல்லா இணைய இதழ்களுமே இன்னும் வயசுக்கு வரவில்லை.)

அடுத்து, அம்பலம். மின்னம்பலமாக இருந்து அம்பலமாக மாறிவிட்ட இந்தத் தமிழ் இதழ் கிட்டத்தட்ட ஒரு 'போர்ட்டல்' அளவுக்கு விஷயங்களை - பிரிவுகளை வைத்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பத்திரிகைக்குள்ளே போனால் தனியே ஒரு சினிமா பத்திரிகை, செய்திப் பத்திரிகை, குழந்தைகள் பத்திரிகை ஆகியவையும் (இலவசத்துக்கு) இலவச இணைப்பாகக் கிடைக்கின்றன.

சங்க இலக்கிய சமாசாரங்கள் முதல் பாரதியார் படைப்புகள் வரை பொக்கிஷங்களுக்கு 'எலக்ட்ரானிக் உருவம்' கொடுத்துக் களஞ்சியமாக்கி வைத்திருக்கிறார்கள். பாரதியாரின் உரைநடையைக் கணிணித் திரையில் படிக்க வேண்டும். காலம் கடந்த கலைஞன் வலைவீதியிலும் ராஜநடை போடுகிறான்.

வெப் துனியா இந்தி சைட் முதலாளியின் தமிழ்ச் சேவை வெப் உலகம். சுதாங்கன் ஆசிரியராக இருக்கும் இந்தப் பத்திரிகையில் நடிகைகளின் கவர்ச்சிப் படங்களெல்லாம் இருக்கின்றன - தனி செக்ஷனாக. விருப்பமானவற்றை நாம் பார்ப்பதுடன் மட்டுமல்லாமல் நம் நண்பரின் ஈ-மெயில் முகவரிக்கும் அனுப்பி, இக உலகில் புண்ணிய காரியம் பல செய்து உய்ய வழிவகை செய்திருக்கிறார்கள்.

வெப் உலகின் சிறப்பம்சம் சுதாங்கன் கேள்வி பதில். சிறிய வாக்கியங்களில் நச்சென்ற பதில்கள். அக்கப் போர்கள், கார்ட்டூன்கள், நிறைய சினிமா என்று இதுதான் சமகால அச்சு வார இதழ்களின் சரியான இணையப் பிரதிநிதியாக இருக்கிறது. திடீர் திடீரென்று சுப்ரமணியராஜுவின் சிறுகதையெல்லாம் வெளியிட்டு அதிர்ச்சி வைத்தியம் தருவதும் உண்டு.




தமிழ் சத்யம் ஆன்லைன் என்பது சத்யம் குழுமத்தின் தமிழ்த் தளம். தமிழ் சத்யம் தனது 'முகங்கள்' பகுதி மூலமும் சிறப்புக் கட்டுரைகள் மூலமும் நிறைய

வாசகர்களைக் கவர்ந்திருக்கிறது. தேவயானி அடுத்த சாவித்ரியா? கலைஞருக்கு ஞானபீடம் பொருத்த மானதா? என்பது போன்ற நாட்டுக்கு அவசியமான பல கருத்துக் கணிப்புகள் இங்கு வாரம்தோறும் நடத் தப்படுகின்றன. இதிலும் சிறுகதைகள், செய்திகள், சினிமா, கலை இலக்கியம் எனப் பல அம்சங்கள் உண்டு.

பார்ப்பதற்கு லட்சணமான தளம் என்ற முறையி லும் வாசக சுவாரசியத்துக்கு அதிக முக்கியத்துவம் தருவது என்ற முறையிலும் இந்த இதழ் முக்கியத் துவம் பெறுகிறது.

ஒரு குட்டித் தகவல். காலச் சுவடு அறக்கட் டளை நடத்தவிருக்கும் தமிழ் இனி 2000 மாநாட் டுக்கென ஆறாம் திணை தனியே ஓரிடம் ஒதுக்கி தகவல்கள் வழங்க ஆரம்பித்திருக்கின்றதென் றால், வரவிருக்கும் ந. பிச்சமூர்த்தி நூற்றாண்டு விழாவை முன்னிட்டு விழாக் குழுவுக்கென தமிழ் சத்யம் தனியொரு இணைய முகவரி தரப் போகிறது. வாரப் பத்திரிகைகளுக்குப் 'போட்டி'யாக மின் பத்திரிகைகள் இலக்கி யம் வளர்க்கத் தொடங்கியிருப்பது ஆரோக்கியமான சங்கதி.

இவையெல்லாவற்றிலிருந்தும் சற்று தூரத்திலிருந்து 'திண்ணை' என்றொரு மின் சிறு பத்திரிகை வெளியா கிறது. என்.ஆர்.ஐ. தமிழர்களை ஒருங்கிணைக்கும் இந்தப் பத்திரிகையின் பக்க அளவு மிக விசால மானது. (முந்தையவற்றை குமுதம் விகடன் சைஸ் என்று சொன்னால், இது துக்ளக் சைஸ்.) கனமான சிறுகதைகள். இலக்கியத்தரமான கவிஞர்களின் கவிதைகள், கொஞ்சம் அரசியல், தலையங்கம் என செயல்படும் இவ்விதழில் கவர்ச்சிப் படங்களோ, சினிமா மசாலாவோ கிடையாது. ரொம்பத் தீவிரமாக மூஞ்சியை வைத்துக் கொண்டுதான் படித்தாக வேண்டும். சமீபத்தில் அசோகமித்திரன் படைப்பு களை எப்படி அணுக வேண்டும் என்பது பற்றிய ஜெயமோகனின் மைல் நீளக் கட்டுரை ஒன்று இதில் இடம்பெற்றிருக்கிறது. சரி, நிதானமாகப் படிக்கலாம் என்று ப்ரிண்ட் அவுட் எடுக்க ஆரம்பித்தால் கிட்டத் தட்ட ஒரு 'ரீம்' பேப்பர் காலி!

தோற்றத்தில் எல்லா பத்திரிகைகளும் கிட்டத் தட்ட ஒரே மாதிரி இருந்தாலும் கையாளும் விஷ யத்திலும் மொழியிலும் நிறைய வித்தியாசம் இருக் கிறது. தம் வாசகர் யார் என்பதை இவை தீர்மான மாக நிர்ணயித்துக் கொண்டு செயல்பட ஆரம்பிக் கும் வரை சந்தா கேட்கப்படும் அபாயம் வாசகர் களுக்கு இருக்காது!

சத்யம் ஆன்லைன் நிறுவனத்தின் தலைமை 'போர்ட்டல்' அதிகாரியும் துணைத் தலைவருமான

இன்டர்நெட் பத்திரிகைகள் அதிகமாகிக் கொண்டே போகின்றன. இவற்றினால் லாபம் கிடைத்ததாகவும் தெரியவில்லை. விளம்பரங்களும் வெகு அரிதாகவே தென்படுகின்றன. பின் எதற்காகப் பல புதிய நிறுவனங்கள் இதில் நுழைகின்றன? வேறு விதத்தில் ஏதாவது லாபம் உண்டா?

''இன்டர்நெட் பத்திரிகைகளை நிறைய செலவு செய்து தான்

# ராம் ராம்ப்க்

கொண்டுவர வேண்டியுள்ளது. போதிய விளம்பரங்கள் பெற்று, 'நஷ்டமில்லை' என்ற நிலை தோன்றவே குறைந்தது நான்கைந்து ஆண்டுகள் பிடிக்கும். உடனடியான எந்தவித வணிக நோக்கத்துடனும் இன்டர்நெட் பத்திரிகையைத்

ராஜ்ராமனிடம் இணையத் தளங்களின் வருமானம் பற்றிப் பேசினோம். பிஸினஸ் தளங்களின் தள்ளாட்டம் ஒரு புறமிருக்க, கலை-கலாசார தளங்கள் மீளுவதே பெரிய விஷயம் என்கிறார் இவர்.

துவக்கிவிட முடியாது. அமெரிக்காவில்கூட இதில் ஈடுபட்ட முதல் செட் ஆசாமிகளே இன்னமும் லாபம் கண்டதாகத் தெரியவில்லை. புதுமையான துறையில் ஈடுபடுகிறோம் என்ற உணர்வு, வருங்காலம் எப்படியும் சிறந்ததாக இருக்கும் என்ற நம்பிக்கை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தான் இன்டர்நெட் பத்திரிகைகள் துவங்கப்படுகின்றன"

# கஷ்டம்!

***திடீரென்று தமிழில் இவ்வளவு இன்டர்நெட் பத்திரிகைகள் தோன்ற ஏதாவது குறிப்பிட்ட காரணம் உண்டா?***

"பொதுவாகவே பெரும்பாலானவர்களைச் சென்று அடைய வேண்டும் என்பதுதான் எந்த ஒரு மீடியாவின் லட்சியமாகவும் இருக்கும். தரமணியில் உள்ள 'டைடல் பார்க்' துவக்கவிழா அன்று பிரதமர் கூட ஆங்கிலத்துக்கு என்று உள்ள சில எல்லைகளைக் குறிப்பிட்டு, இந்திய மொழிகளில் இங்குள்ள இன்டர்நெட் நிறுவனங்கள் கவனம் செலுத்துவதுதான் புத்திசாலித்தனமான முடிவாக இருக்கும் என்றது குறிப்பிடத்தக்கது. பிற நாடுகளில் உள்ள தமிழர்களுக்கு ஆங்கிலத்தில் விஷயங்களைத் தரப் பல இணையத் தளங்கள் இருக்கின்றன. தமிழிலும் தருவதற்கு எங்களைப் போன்றவர்கள் முயற்சிக்கிறோம். அது மட்டுமல்ல, ஒவ்வொரு மொழி வாசகர்களுக்கும் ஒவ்வொருவித தனித்தன்மை உண்டு. அதைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். மலையாளப் பத்திரிகையை ஆன்லைனில் அளிக்கும்போது, மலையாளிகளின் ஆழ்ந்த, தீர்க்கமான அரசியல் பார்வைகளை மனத்தில் கொண்டு செயல்பட வேண்டும். அதேபோல குஜராத்தி மொழியில் இன்டர்நெட் இதழைத் துவங்கும்போது, 'குஜராத்திகள் நிதி, பங்கு மார்க்கெட் போன்றவற்றில் அதிக ஆர்வம் கொண்டவர்கள்' என்பதை உணர்ந்து அதற்கேற்பச் செயல்படுவோம்."



***இன்டர்நெட்டைப்***

***பயன்படுத்தும் தமிழ் வாசகர்களைப் பற்றிய உங்கள் கருத்து என்ன?***

"பொழுதுபோக்கு அம்சங்களில் அதிக ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். அடுத்து, நடப்புச் செய்திகளில், இசை பிற கலைகள், இலக்கியம் போன்றவற்றிலும் நாட்டம் இருக்கிறது."

***இன்டர்நெட் வலைத்தளத்தை எடுத்து நடத்துவதென்பது சுலபமான விஷயமா என்ன? சில நாட்களுக்கு முன்புகூட ஒரு இளைஞன் தனது ஐடியாவைப் புதியதொரு வலைத் தளத்தில் ஏற்றி, பல லட்சங்கள் சம்பாதித்துவிட்டதாகவும், உடனே தனது வலைத் தளத்தை மூடிவிட்டதாகவும் செய்திகள் வந்தன?***

"புதிய, சிறந்த ஆலோசனைகளுக்கு எப்போதுமே மதிப்பு உண்டு. நான்கு பேர் சேர்ந்து ஒரு தளத்தைத் தொடங்கி விடலாம். உடனடி லாபமும் காணலாம். ஆனால் தொடர்ந்து இணையத்தில் அந்தத் தளத்தை வெற்றிகரமாக நடத்துவது சுலபமான விஷயமில்லை. அதற்கு ஒரு பெரிய, வலுவான குழு தேவைப்படும்."

***சிறிது காலத்துக்கு முன்பு புற்றீசல்கள் போல பல 'ப்ரவுஸிங்' மையங்கள்***

# ஒரு கதைக்கு நாலரை லட்சம் டாலர்!

***"நியூயார்க்கர் அல்லது ப்ளேபாய் போன்ற பத்திரிகைகளில் என் கதையைப் பிரசுரித்திருந்தால்கூட மிஞ்சிப் போனால் பத்தாயிரம் டாலர் கிடைத்திருக்கும். இப்போது எனக்கு நாலரை லட்சம் டாலர் கைக்கு வந்திருக்கிறது" என்கிறார் ஸ்டீபன் கிங் என்ற எழுத்தாளர்.***

***எப்படி? நோபல், புக்கர், புலிட்சர் இந்த மாதிரி ஏதாவது பரிசு தேவதை அவர் கதவைத் தட்டிவிட்டாளா? இல்லை.***

***தன்னுடைய 66 பக்க சிறுகதையை(!) இன்டர்நெட்டில் உலவ விட்டிருக்கிறார். ஐந்து லட்சம் வாசகர்கள் இந்தக் கதையைப்***



*தொடங்கப்பட்டன. இப்போது அவற்றில் கணிசமானவை மூடுவிழா நடத்திவிட்டன. என்ன காரணம்?*

"நிறைய மூலதனத்தோடு இதைப் பெரிய அளவில் துவங்கியவர்கள்தான் கஷ்டப்படுகிறார்கள். இப்படிச் சில வருடங்களுக்கு முன்பு தொடங்கியபோது இதற்கான வன்பொருளின் விலையும் மிக அதிகம். அரசு வசூலித்த கட்டணமும் அதிகம். ரியல் எஸ்டேட்டும் உச்சக் கட்டத்தில் இருந்தது. மும்பையில் ஒரு ஐந்து நட்சத்திர ஹோட்டலில் மணிக்கு அறுநூறு ரூபாய் என்றெல்லாம் வசூலிக்கத் தொடங்கினார்கள். ஆனால் இப்போது மணிக்கு இருபது ரூபாய் என்கிற அளவிலெல்லாம் அளிக்க பல மையங்கள் தயார் என்னும்போது வேறுவழி? ●

**படித்திருக்கிறார்கள் அல்லது படிப்பதற்காகப் பிரதி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.**

**இன்டர்நெட் இலக்கியத்துக்கு இவ்வளவு டிமாண்டா (சர்வதேசப் பிரபலங்களின் எழுத்துக்களுக்கு டிமாண்ட் ஏற்பட்டிருந்தால் அது வேறு விஷயம்) என்று ஆச்சர்யப்பட்டுக் கொண்டிருக்கிறார் ஃப்ளோரிடாவில் உள்ள இந்த எழுத்தாளர். ஒரு வருடத்துக்கு முன்பு கார் விபத்தொன்றில் சிக்கிக் கொண்ட இவர் சிறிது சிறிதாக குணமடைந்து வருவதும் குறிப்பிடத்தக்கது.**

**இந்த அளவு பலன் கிடைக்கவில்லை என்றாலும், ஏற்கெனவே இது போன்ற முயற்சிகள் நடைபெறத் தொடங்கிவிட்டன. ஷபிரோ என்ற பெண்மணி 'லிப் சர்வீஸ்' என்ற தனது குறுநாவலை எந்தப் பதிப்பகமும் வெளியிடத் தயாராக இல்லாததால் இன்டர்நெட்டில் வெளியிட்டார். அவரது எழுத்துக்கள் ஊன்றிப் படிக்கப்பட்டதோ இல்லையோ, அவரது பெயர் பிரபலமடைந்துவிட்டது. இன்டர்நெட்டின் வீச்சு அப்படி.**

**இட நெருக்கடி என்றெல்லாம் எதுவும் இல்லாத இன்டர்நெட், ஒரு ராட்சஸ டினோசர் ரகப் பதிப்பகமாகவே விளங்கலாம்! ஸ்டீபன் கிங் தனது அடுத்தப் புதினத்தைத் தொடர்கதையாக இன்டர்நெட்டில்தான் வெளியிடப் போகிறார்!**




# "என்.ஆர்.ஐ.களே எங்கள் நேயர்கள்!"



சன் டீவி, ராஜ் டீவி, சோனி டீவி, ஸ்டார் டீவி பார்க்கிற நேயர்களே! எப்போதாவது நியூ மில்லெனியம் டீவி பார்த்திருக்கிறீர்களா? இன்டர்நெட்டில் மட்டும் ஒளிபரப்பாகும் டீவி இது. (www.numtv.com)

ஒரு நாளில் இருபத்தைந்து மணி நேரத்தை இணையத்துடன் குலாவுவதிலேயே செலவிடும் அன்பர்கள் ஒரு ஓரமாக இந்த 'நம் டீவி'யை ஆன் செய்து வைத்துவிட்டால் அது பாட்டுக்குப் பழைய பாடல், புதிய பாடல், சைவ சமையல், அசைவ சமையல் விளையாட்டு, டூரிஸம், மெகா தொடர், மகா தொடர், ரைட்ஸ் பெறப்பட்ட சினிமாக்கள் என ஓடிக் கொண்டே இருக்கும்.

போரடித்தால் கழுத்தை நெரித்துவிடலாம். அல்லது சானல் மாற்றிக் கொள்ளும் சௌகரியமும் உண்டு.

சன், ராஜ், சோனி, ஈநாடு நெட்வொர்க் நிகழ்ச்சிகளும் இந்த numtvல் ஒளிபரப்பாகின்றன. 'பப் பரபப்பர பய்ங்' என்கிற முன்னணி இசையுடன் 'வணக்க்க்கம்!'












என்று நிர்மலா பெரியசாமி நியூஸ் படிக்கக் கேட்கலாம். ''என் உயிரைக் கேட்டா குடுத்துடுவேன்... ஆனா மனசைக் கேட்டுட்டியே!'' என்பது போன்ற ஆழ்ந்த தத்துவப் பின்னணியுடனான வசனங்கள் நிறைந்த சொந்தம், பந்தம், துவந்தம் போன்ற தொடர்களை ரசிக்கலாம். பிறகு இருக்கவே இருக்கிறது, டாப் டென், டாப் ட்வென்டி, டாப் தர்ட்டி என டாப் கழற்றும் சினி பாடல்கள்.

பெண்டமீடியா கிராபிக்ஸ் நிறுவனத்தின் புது நூற்றாண்டுப் புதிய முயற்சி இந்த 'நம் டீவி'.

''கடந்த டிசம்பர் இசை விழாவின் போது கலாரசனா நிகழ்ச்சிகளை நேரடியாக இன்டர்நெட்டில் ஒளி பரப்புகிற முயற்சியுடன் ஆரம்பிக்கப்பட்டது நம் டீவி. இப்போது 'பே-சானல்' (பணம் கட்டிப் பார்க்கணும்) ஆகி விடும் அளவுக்கு கனஜோராக வளர்ந்துவிட்டது!'' என்கிறார் சந்திரசேகரன். பெண்டமீடியாவின் பர்ஸனல் ஸ்கிரீன் மானேஜர் இவர். (டீவியை சின்னத் திரை என்பதுபோல இன்டர்நெட் திரையை சொந்தத்திரை என்கிறார்கள்.)

''முழுக்க முழுக்கப் பொழுதுபோக்கு டீவி இது. எல்லா மொழிகளிலும் கொண்டு வர இருக்கிறோம்'' என்கிறார் சந்திரசேகரன்.

''சன் டீவி, ராஜ் டீவி எல்லாவற்றையும் தான் கேபிளில் பார்த்துக் கொள்ளலாமே? அதை ஏன் இன்டர்நெட் திரையில் மீண்டும் காட்டுகிறீர்கள்?''

''வெளிநாடுகளில் வசிக்கிற தமிழர்களுக்கு இந்தத் தனியார் டீவிக்களைப் பார்ப்பதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. உதாரணமாக அமெரிக்காவில் சன் டீவி தெரிவதில்லை. வேறொரு

நாட்டில் சோனி தெரியாமலிருக்கலாம். ஐரோப்பாவின் பல பகுதிகளில் ஈநாடு தெரிவதில் சிக்கல் இருக்கிறது. இங்குள்ள நம்மவர்கள், இந்திய டீவி நிகழ்ச்சிகளைக் காண ஆர்வமுடனிருக்கிறார்கள். அவர்களுக்காகத் தொடங்கப்பட்டதுதான் இந்த வசதி!''

"தொழில்நுட்ப வளர்ச்சி அதிகரித்துக் கொண்டே போகிற நாளில் உலகம் முழுவதும் எல்லா டீவிக்களும் தெரிகிற காலம் வெகு தொலைவில் இல்லையே?''

''அது உண்மைதான். அப்போது 'num' சானல்களை மட்டும் இன்டர்நெட்டில் ஒளி பரப்பினால் போயிற்று. இப்போதே எங்கள் numtvயில் பத்து சானல்கள் வைத்திருக்கிறோம். இதை 100 சானல்களாகப் பெருக்கப் போகிறோம். 'நெட் வழி கேளிக்கை' என்றாலே அப்போது 'நம்டீவி'தான் என்கிற நிலை இருக்கும்!''

''எல்லா சரி, நம்டீவியின் ஒளிபரப்புத்தரம் சரியாக இல்லையே? குறிப்பாகப் படங்கள் நகருவதே இல்லை. ஸ்டில்கள் மாறுவது போலத்தானே இருக்கிறது?''

''விஷுவல் தெளிவின்மைக்கு வி.எஸ்.என்.எல். லைன்தான் காரணம். இது ஆரம்பச் சிக்கல்தான். போகப் போகச் சரியாகிவிடும். ஆனால் இந் நிலைமை இங்குதானே தவிர வெளிநாடுகளில் சாதாரணமாக டீவி பார்ப்பது போலவே பார்க்கலாம்.

''இங்கும்கூட, கேபிள் மோடம் (கேபிள் டீவி கனெக்ஷனிலேயே இன்டர்நெட் இணைப்பைச் சேர்த்து விடுவது) பரவலாகிவிட்டால் இந்தப் பிரச்னை இருக்காது.''

**ந**ம் டீவிக்காரர்கள் நம் ரேடியோவும் நடத்துகிறார்கள். ஆல் இந்தியா ரேடியோவின் நிகழ்ச்சி வரிசை போலவே இதிலும் இருக்கிறது. நாளெல்லாம் கேட்கலாம். கொண்டித் தோப்பு தமிழரசி, பேராவூரணி பிரபாகரன், அயன்புரம் சத்திய நாராயணன் விரும்பிக் கேட்காவிட்டாலும் இதிலும் பாடல்கள் உண்டு. தவிர நேயர் கேள்விக்கு பதிலளிக்கிறார் சுஜாதா. பழைய வானொலி இயக்குநர் விஜய திருவேங்கடம்தான் இதன் பொறுப்பாளர்.

நம் டீவியின் சந்தா மாதத்துக்குப் பத்து டாலர்.

''வேறு வழியில்லை. எங்கள் நேயர்கள் என்.ஆர்.ஐக்கள்தான்'' என்கிறார் சந்திரசேகரன்.

ரொம்ப சந்தோஷம். காமதேனுவில் உலகம் சுற்றும் வாலிபன் நாநூறாவது முறை வரப் போகிறது. நாம் அதற்குப் போகலாம்.

# முதலீடு செய்யுங்கள்! முதலாளியாகுங்கள்!

இந்தியாவின் மிகப் பெரிய போர்ட்டல்களான rediff.com., satyamonline.com, 123india.com போன்றவையே இன்னும் லாபம் பார்க்காமல் மூச்சைப்பிடித்துக் கொண்டு முக்குளித்துக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். இதில் கவனிக்கவேண்டிய விஷயம், இவர்களெல்லாம் கோடிக் கணக்கான ரூபாயை இதில் முதலீடு செய்திருப்பவர்கள்.

இன்டர்நெட் வர்த்தகத்துக்கு இந்தியாவில் எதிர்காலம் நன்றாயிருக்கும் என்கிற நம்பிக்கையின் அடிப்படையில் இவர்கள் செயல்படுகிறார்கள். "லாபமெல்லாம்





இன்னும் ஐந்து வருடங்கள் கழித்துத்தான்'' என்று ஞானம் பெற்றவர்களாகப் பேசுகிறார்கள்.

இந்நிலையில் புதிய சிந்தனைகளுடன் வலைத் தளத்தில் கடை பரப்ப வரும் இந்திய இளைஞர்களால் என்ன செய்ய இயலும்?

இன்டர்நெட்டின் எதிர்காலம் குறித்து



## திக்குத் தெரியாத நெட்டில்...

"ஐயா தெரியாதய்யா, அட்ரஸ் தெரியாம நெட்டுக்குள்ள நுழைஞ்சிட்டேன். நல்ல ஜோசியரைப் பார்க்கணும், யார் யாரோ இருக்காங்களாம் நெட்ல, விலாசம் தெரியலை!"

இப்படி அட்ரஸ் தெரியாமல் திரிபவர்களுக்கென்றே இருக்கிறது search engine. (தேடும் இயந்திரம் எனத் தமிழ்ப்படுத்தலாமா?) அதனிடம் நெட்டில் இருக்கும் ஜோசியர்களைக் காட்டு என்றால் போதும். மொத்த ஜோசியர்களின் ஜாதகமும் (வெப்சைட் அட்ரஸ்) நொடியில் திரைக்கு வந்துவிழும். அதில் அவர் தேடிய நாடி ஜோசியர் நாராயணசாமியும் இருப்பார்.

Yahoo, Altavista, Excite, Lycos போன்றவை சில பிரபல சர்ச் எஞ்சின்கள்.

## வாவ்! WAP

காது குடைவது போல் காதுக்குள்ளே பொருத்திக் கொண்டு போகும் செல்ஃபோனை இத்துறைப் பெரியவர்கள் கவலைப்படட்டும். நாம் உடனே சம்பாதிப்பது எப்படி? அல்லது சம்பாதிக்க முடியுமா?

இக்கேள்விக்கு விடை–

முடியும்! இன்னும் கொஞ்சம் பெரிய சைஸ் முடியும் போட்டால் வியப்படையாதீர்கள்.

சமீபத்தில் ஒரு அமெரிக்கச் சிறுவன் நெட்டில் கோடிக்கணக்கில் சம்பாதித்த செய்தியைப் படித்திருப்பீர்கள்.

எப்படிச் சம்பாதித்தான்?

தேவை– புதிய புதிய ஐடியாக்கள்!

வியாபார ரீதியில் நல்ல பலன் கொடுக்கக் கூடும் என்று எல்லா தரப்பினரும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஐடியாக்களை உருவாக்கி, குறைந்த பட்ச செலவில் ஒரு சைட் தொடங்கி, ஓரளவு விளம்பரம் செய்து, அந்த சைட்டுக்கு நிறையப் பேர் வந்து போக ஆரம்பித்துவிட்டால் போதும்!

அந்த சைட்டை அப்படியே ஏதாவது ஒரு பெரிய நெட் நிறுவனத்துக்கு விற்று விடலாம்.

பிற்காலத்தில் இது நிச்சயம் லாபம் கொழிக்கும் 'சைட்'டாக மலரும் என்று பெருந்தலைகள் நம்பினால், உங்கள் ஐடியாவுக்குப் பல லட்சங்கள் தரவும் தயாராயிருப்பார்கள்!

இதைச் செய்ய உங்களுக்கு கம்ப்யூட்டர் பற்றியோ, ஸாஃப்ட்வேர் பற்றியோ சிப் பற்றியோ தெரிந்திருக்க வேண்டியதில்லை. உருளைக்கிழங்கு சிப்ஸ் பற்றி மட்டும் தெரிந்தவர்கள் கூட களத்தில் இறங்கலாம்.

உதாரணம் பார்க்கலாமா?

அமெரிக்காவைச் சேர்ந்த ஓர் இளைஞன் சிறுவர்களுக்காக ஒரு வெப்சைட் தொடங்கினான். சிறுவர்களென்றால் மூன்று முதல் பத்து வயதுச் சிறுவர்கள்.

பெற்றோர் இருவரும் அலுவலகம் சென்றுவிட, செவிலித்தாய் கவனிப்பில் போரடித்துக் கொண்டு, குறுக்கு யோசனைகளுடன் டீ.வி பார்த்துக் கெட்டுப் போகும் அமெரிக்கச் சிறுவர்களை, ஆரோக்கியமான, சிந்தனையைத் தூண்டும் விளையாட்டுகள், புதிர்கள், க்விஸ், கதைகள், பாடல்கள், கார்ட்டூன் என திசை திருப்பி தம் சைட்டுக்கு

இனி கண்ணுக்கு முன் வைத்துப் பார்க்கலாம். இது WIRELESS APPLICATION PROTOCOL (WAP) தொழில் நுட்பத்தின் சாதனை, இன்டர்நெட்டை செல்ஃபோனின் தம்மாத்துண்டு திரைக்குள் புகுத்தி உள்ளது. நெட்டில் வலம் வரலாம், ஈ மெயில் அனுப்பலாம், உலகை உள்ளங்கையில் அடக்கிக் கொண்டு நடக்கலாம்! கண்வலியும் வரலாம்!

## DOT.COM

எல்லா வெப்சைட்டும் டாட்காமாக இருக்க வேண்டியதில்லை.

டாட்நெட், டாட்edn, டாட்org என்றும் இருக்கலாம்.

- com என்பது பொதுவாக வர்த்தக சைட்
- edn-எஜுகேஷன்- கல்வி சம்பந்தப்பட்ட சைட்கள். பெரும்பாலும் யூனிவர்சிட்டிகள் .ednனாகவே இருக்கும்.
- org- organisation, நிறுவனத்தை குறிக்கும்.
- நெட்- நெட்டே தான்!

வரவழைத்தான் அந்த இளைஞன்.

'interactive site' என்று சொல்லப்படும்- 'உடன் விளையாடும்' அந்தத் தளம், ஏராளமான அமெரிக்கக் குழந்தைகளைச் சுண்டியிழுக்க, எக்கச்சக்க க்ளிக் ரேட்ஸ்!

உடனே ஒரு பெரிய போர்ட்டல் நிறுவனத்துக்குத் தம் சைட்டை விற்ற அந்த இளைஞன் அடைந்த தொகை-இரண்டரை லட்சம் டாலர்கள்!

நம் ஊரிலும் பெரிய போர்ட்டல்கள் ஏதாவது நல்ல ஐடியா வருகிறதா என்று வலை உலகை உன்னிப்பாக கவனித்துக் கொண்டே இருக்கிறார்கள். வசமாக மாட்டினால் 'லபக்'கிக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்.

சமீபத்தில் ராஜேஷ் ஜெயின் என்ற வடநாட்டவரின் khel.com, khoj.com ஆகிய விளையாட்டு மற்றும் வேலைவாய்ப்புத் தளங்களை சத்யம் ஆன்லைன் நிறுவனம் 450 கோடி கொடுத்து வாங்கிவிட்டது!

காரணம், ராஜேஷின் சைட்டுக்கு என்.ஆர்.ஐ.களின் வருகை மிக அதிகம் என்பதுதான்!

இங்கே டாலரில் அல்லாவிட்டாலும் ரூபாயிலாவது சில லட்சங்களுக்கான சாத்தியங்கள் வளமாகவே இருக்கின்றன.

ஆரம்பிக்க வேண்டியதுதானே?



## பிரௌசிங் சென்டர்கள் :

# “தமிழ்த்தளம் பெருகினால் தள்ளாட்டம் குறையும்!”

எஸ்.டி.டி. பூத்துகளின் எண்ணிக்கையைப் பின்னுக்குத் தள்ளிவிட்டன, இன்டர்நெட் கஃபேக்கள். குளிரும் ஏசிக்கு நடுவே காப்பியைச் சுவைத்தபடி மணிக்கணக்கில் பிரௌஸிங் செய்ய சௌகர்யம் செய்து தரும் பணக்கார சென்டர்கள் ஒரு புறம். பத்தே ரூபாய் கட்டணத்தில், மெயில் வந்திருக்கிறதா எனப் பார்த்து விட்டு, கையோடு ஒரு பதில் மெயிலையும் அனுப்பிவிட்டுப் போக மட்டுமே அனுமதிக்கும் சின்னச் சின்ன சென்டர்கள் மறுபுறம். இப்படி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இந்த இணைய மையங்களுக்கு உண்மையில் தேவை இருக்கிறதா? இவற்றை லாபகரமாக நடத்த முடிகிறதா? இங்கே வரும் வாடிக்கையாளர்கள் எதற்காக வருகிறார்கள்? இவர்களைக் கவர்ந்து இழுப்பது என்ன? பார்த்து வரப் புறப்பட்டோம்.

சென்னை நுங்கம்பாக்கத்தில் ஐந்து நட்சத்திர வசதிகளோடு, பிஸியாக இயங்கிக் கொண்டிருந்தது, டிஷ்நெட் டி.எஸ்.எல். மையம். கல்லூரி மாணவ, மாணவிகள், நிறுவனப் பிரதிநிதிகள் என்று நூற்றுக்கும் அதிகமான வாடிக்கையாளர்கள், மௌஸுடன் மல்லுக்கட்டியபடி இருந்தனர்.

இந்த மையத்தின் மேனாலர் ஒமேகா சொல்கிறார் :

“இந்த மையத்தில் 141 இணைப்புகள் வெச்சிருக்கோம். இது தவிர சென்னை முழுக்க இருபத்து இரண்டு மையங்கள் இருக்கு. இந்தியா முழுக்க எழுபத்தைந்து மையங்கள். கேபிள் மூலம் இணைய இணைப்பு தரும் முதல் நிறுவனம் நாங்கள் தான். அதோடு இரண்டு எம்பி லைனில் அறுபத்து நான்கு கேபிபிஎஸ் வேகத்தில் தளங்களைப் பார்க்கலாம். மெயில் அனுப்பலாம். டவுன்லோட் செய்யலாம்.

பெண்களுக்கு மட்டும்



வேகம் அதிகம்ங்கிற காரணத்தால் எங்களுக்கு வாடிக்கையாளர்கள் அதிகம் கிடைக்கறாங்க. அதோடு எவ்வளவு நேரம் பிரௌசிங் செய்தாலும் கண்ணை உறுத்தாத எல்சிடி மாடல் கம்ப்யூட்டர்கள் தான் நாங்க வைத்திருக்கிறோம். காலை ஒன்பது மணி தொடங்கி இரவு பன்னிரண்டு மணிவரை மையங்கள் இயங்கும். காப்பி, சிற்றுண்டி கிடைக்கும் கேப்டீரியாவும் இங்கே உண்டு. இப்போ நாங்க அறிவித்த இலவச இன்டர்நெட் இணைப்புத் திட்டத்தைப் பயன்படுத்தி, வெறும் இருநூற்று ஐம்பது ரூபாய் பதிவுக் கட்டணத்தில் நாற்பத்தெட்டாயிரம் குடும்பத்தலைவிகள் இணைப்பு வாங்கி இருக்காங்க. அதிக சந்தாதாரர்களும், வாடிக்கையாளர்களும் இருப்பதால், நாளுக்கு நாள் நிறுவனம் வளர்ந்துக்கிட்டே போகுதே தவிர, பின்னடைவு மருந்துக்கும் இல்லே!"

இதே மையத்தில் பிரௌஸ் செய்து கொண்டிருந்த கல்லூரி மாணவி சௌமியா என்ன சொல்கிறார்?



• ஒமேகா



• ராஜேந்திரன்

• சௌமியா

"இன்டர்நெட்ல பொழுதுபோக்குத் தளங்களைப் பார்க்கிறதுதான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். முக்கியமா சினிமா தளங்களை விரும்பிப் பார்ப்பேன், படிப்பேன். எப்போதாவது சாட் (அரட்டை) செய்வேன். ஆனாலும் சாட்லே டைம்தான் வீணாகுது. புதுசு புதுசா வீடியோ கேம்ஸ் வருது. அதையும் ஆடுவேன்.





• ஸ்ரீகாந்த்

• சிறு இன்டர்நெட் சென்டர்

பரீட்சை நேரத்திலே நிறைய மெட்டீரியல்ஸ் எடுத்துக்குவேன். மேலை இசை வழங்கும் மியூசிக் தளங்களும் பிடிக்கும். ரொம்ப போர் அடிச்சு மன அழுத்தம் வந்துட்டா, கிளாஸ் கட் பண்ணிட்டு இங்கே வந்துடுவேன். பிரௌசிங்ல மனசு ரொம்ப ரிலாக்ஸ் ஆயிடுது''

சௌமியாவின் விருப்பத்திற்கும் பயன்பாட்டிற்கும் நேர்மாறானது வீணாவின் விருப்பம்.

''எனக்கு சாட்டிங்தான் உயிர். அதுக்காகத் தேவையில்லாத அரட்டை அடிக்கிறது, ஜொள்விடறதெல்லாம் பிடிக்காது. இதனால உலகம்பூரா பல துறை நண்பர்கள் கிடைச்சிருக்காங்க. கலிபோர்னியா யூனிவர்சிட்டியில் பயோ கெமிஸ்ட் படிக்கிற என் தோழிகிட்டே ஜினோம் பத்தித் தெரியுமான்னு கேட்டேன். அவ்ளோதான். அதுபத்தி ஐயாயிரம் சைட் இருக்குன்னு எனக்கொரு லிஸ்ட்டே அனுப்பி வெச்சுட்டா. வீட்லே கம்ப்யூட்டர் இருந்தாலும் இங்கே வந்து சாட் செய்யுறதுதான் பிடிக்குது'' என்றபடி எதிர்முனைத் தோழி / தோழனின் கேள்விக்கு பதிலை டைப் செய்யத் தொடங்கிவிட்டார்.

அடுத்து நம் பார்வையில் பட்டவர் ஸ்ரீகாந்த். goyogi.com என்ற இணைய தளத்தின் கண்டண்ட் டெவலப்பராகப் பணியாற்றும் இவரது மாதச் சம்பளம் ரூபாய் இருபத்தையாயிரம்.

''இண்டர்நெட் தளங்கள், வேலை வாய்ப்பை அள்ளி அள்ளிக் கொடுக்கும் அட்சய பாத்திரமாக மாறிவிட்டது. நான் ஒரு பெரிய புரோகிராமரா வரணும்னு நினைச்சேன். ஆனால் கண்டண்ட் டெவலப்பர் வேலை கிடைச்சிடுச்சி. நான் வேலை செய்யுற இந்தத் தளம் முழுக்க முழுக்க வெளிநாடு வாழ் இந்தியர்களுக்காக உருவாக்கப் பட்டிருக்கு. கும்பகோணம் மகா மக்குளம் தொடங்கி பால்தாக்ரே விவகாரம் வரைக்கும் இந்தியா சம்பந்தமான எல்லாம் இதுல உண்டு. இந்தியாவில் வாழ முடியாத குறையைத் தீர்க்கணும்ங்கிறதுதான் கான்செப்ட். நான் பாலிவுட், கோலிவுட் இரண்டு காலத்தையும் தினசரி அப்டேட் செய்துடுவேன். இந்த வரிசையிலே இருக்கிற எல்லோருமே என் சக கம்பெனி ஊழியர்கள்தான். ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு பகுதியைப் பார்க்கிறாங்க'' என்றார்.

நமது அடுத்த விசிட் ட்யூக் சைபர்நெட். மீனாட்சி பொறியியல் கல்லூரி அருகே பத்து - இருபது அடி இடவசதியில் பதினைந்து கம்ப்யூட்டர்களோடு இயங்கிக் கொண்டிருந்தது. இந்தச் சிறிய மையத்தில் குறைந்த பட்சம் பதினைந்து நிமிடம்கூட பிரௌசிங் செய்யலாம். கட்டணம் பத்து ரூபாய். ஒரு மணி நேரத்திற்கு இருபத்தைந்து ரூபாய். எப்படிக் குறைவான கட்டணத்தில் இவர்களால் நடத்த முடிகிறது?

''ஒவ்வொரு வீட்டிலும், ஒரு தபால் பெட்டி வைத்திருக்கிறோம். ஆபீஸ் முடித்து வீடு வந்ததும், பெட்டியைத்

திறந்து, நமக்குத் தபால் வந்திருக்கிறதா என்று பார்க்கிறோம். அதுபோல தங்களுக்கு 'மெயில்' வந்திருக்கிறதா என்று பார்க்கவே பலரும் வருகிறார்கள். அலுவலகப் பிரதிநிதிகள், மாணவர்கள் என்று வந்து முதல் பத்து நிமிடத்தில் மெயில் செக் செய்து, பதில் மெயில் அனுப்பிவிட்டுப் புறப்படுகிறார்கள். மற்றொரு புறம் தளங்களைப் பார்வையிடவும், சாட் செய்யவும் மாணவர்கள் அதிக அளவில் வருகிறார்கள். என்ன ஒரு வேதனையான விஷயம் என்றால் ஆங்கிலம் தெரிந்தவர்கள்தான் நெட்டைப் பயன்படுத்த முடிகிறது. மற்றவர்கள் ஏக்கத்தோடு பார்த்துவிட்டுச் செல்வதோடு சரி. நாம் சாப்டுவேரில்தான் முன்னேறி இருக்கிறோம். ஆனால் பிராந்திய மொழியை இணையத்தில் பயன்படுத்துவது குறைவாக உள்ளது! இதனால் இன்டர்நெட்டைப் பயன்படுத்துவோரின் எண்ணிக்கை குறைவு. ஆனால் சென்டர்கள் அதிகம். அதனால் ஐந்து, ஆறு லட்சம் செலவில் தொடங்கப்பட்ட சென்டர்களை மூடிக் கொண்டு வருகிறார்கள். இன்னும் பத்து வருடம் ஆனால் கூட நான் போட்ட முதலை எடுக்க முடியுமா என்பது சந்தேகம்தான்'' என்கிறார் உரிமையாளர் ராஜேந்திரன்.



• அகமது

இதே மையத்தில் மைக்ரோசாப்ட் தளத்தில் எதையோ தேடிக் கொண்டிருந்த அகமது எதற்காக இன்டர்நெட் பயன்படுத்துகிறார்?

"நான் ஒரு சாப்ட்வேர் டெவலப்பர். கம்பனி தலைமையகம் மலேசியாவில் இருக்கு. என்னை மாதிரி சாப்டுவேர் டெவலப்பர்களுக்கு மைக்ரோசாப்ட் தளம் ஒரு பெரிய வரப் பிரசாதம். சாப்ட்வேர்ல லேட்டஸ்ட் எது, எந்தெந்தத் துறையில் சாப்ட்வேர் உடனடித் தேவை இருக்கு — இப்படி அடிப்படைத் தகவல்கள், இது தொடர்பான செய்திகள், கட்டுரைகன்னு நிறைய. இதுமாதிரி சின்ன சென்டர்தான் எனக்கு வசதி. ஏன்னா கட்டணம் குறைவு. ஸ்பீடும் கிடைக்குது'' என்றவரிடம் உங்கள் நிறுவனத்திலேயே இணைப்பு இருக்குமே, இங்கே ஏன் வந்தீர்கள் என்றோம்.

''இதைவிட நல்ல கம்பெனியில் வேலைதேட, அலுவலக கம்ப்யூட்டரில் முடியுமா? அதுதான் இங்கே!'' என்கிறார்! ●



பெரும்பாலான சைட்டுகளில் இப்போது கல்யாணத் தரகர்களுக்கு வேட்டு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். 'மேட்ரிமோனியல்', 'மணமேடை', 'மணப் பொருத்தம்' என்று வாழ்க்கை ஜோடிப் பொருத்தம் பார்க்கும் பகுதி இல்லாத போர்ட்டலே இல்லை. கல்வி போர்ட்டல்கள் கூட வேலை வாய்ப்புப் பகுதி போல வாழ்க்கை வாய்ப்புப் பகுதி வைத்தால் ஆச்சர்யப்படுவதற்கில்லை.

இதுபோன்ற திருமண சைட்டுகளில் முதலில் நீளமான சட்ட திட்டங்கள் விரிகிறது. படிக்கப் பொறுமையிருந்தால் படிக்கலாம்.

பின்னர் மணமகள் வேட்டையா? மணமகன் வேட்டையா? என்ற கேள்வி. அதிலும் எந்த மாதிரி ஆள் தேடுகிறீர்கள்? ஜாதி, மதம், வயது, உயரம் (கலர், எடை பார்த்ததாக நினைவில்லை) க்ளிக் செய்தால் அந்த வகையறாவில் அடங்கிய பட்டியல் வரும். பெயர், வயது, விலாசம், நட்சத்திரம், கோத்திரம் தவிர சில தளங்களில் போட்டோக்கள் கூட உள்ளன!

சைட்டிலேயே ஜாதகம் கணிக்கிறார்கள்; பொருத்தம் பார்க்கிறார்கள். அது மட்டுமல்ல; கல்யாணச் சத்திரம்,

# இணைய மாநாட்டுக்கு வந்த சரித்திர புருஷர்கள்!

சிங்கப்பூரில் சமீபத்தில் நடைபெற்ற தமிழ் இணையம் 2000 மாநாட்டில் கலந்து கொண்டு திரும்பியிருக்கிறார்கள் மகாகவி பாரதியும், மாமன்னன் ராஜராஜ சோழனும்.

உலகம் முழுவதுமிருந்து இருபதாயிரம் பேர் கலந்து கொண்ட இந்த இணைய மாநாட்டிற்கு, சென்னையைச் சேர்ந்த டெலி இந்தியா நிறுவனத்தின் தலைவர் பாலா பிள்ளையும், அந்த நிறுவனத்தின் தலைமைச் செயல் அலுவலர் சத்தியமூர்த்தியும்கூட சென்றிருந்தனர். ஆனால் கோட் சூட், டை இத்தியாதிகள் தவிர்த்துவிட்டு, ராஜராஜ சோழன், பாரதியார் வேடத்தில்! எதற்காக இந்த ஆர்ப்பாட்டம்?



"சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு மன்னர்களும், புலவர்களும் சங்கம் அமைத்து வளர்த்தெடுத்த தமிழ்மொழி, இரண்டாயிரமாவது ஆண்டில் கணிப்பொறித் தமிழாக, இணையத் தமிழாகக் காலடியெடுத்து வைக்கிறது. எந்த ஒரு அறிவியல் வளர்ச்சிக்கும் ஈடு கொடுக்கும் தமிழ் மொழிக்குத் தனியொரு இணைய மாநாடு நடக்கும்போது, அதில் ஒரு தமிழ் மாமன்னனும், மகாகவியும் கலந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினோம். அதன் மூலம் தமிழ்ப் பண்பாட்டுப் பெருமையை உலகப் பிரதிநிதிகளுக்கு நினைவு படுத்தும் வாய்ப்பு கிடைக்கும் என்று நினைத்தோம். அதனால்தான் ராஜராஜன், பாரதி வேடமணிந்து இணையத் தமிழின் தேவைகள் குறித்து மாநாட்டில் உரையாற்றினோம். ராஜராஜ சோழன், பாரதி போன்



* ஆனந்த நடராஜன்

## ...ம் டும்.com

கோயில்கள், சமையல்காரர், நகை நட்டு, புடவைக் கடைகள், கச்சேரி கோஷ்டி, சாஸ்திரிகள், பரிசுப் பொருட்கள் கடை, பாத்திரக் கடைகள் என பூ, பழம், வெற்றிலை வரை எல்லா சப்ளையர்களின் பெயர் விவரத்தோடு தந்து விடுகிறார்கள். அவர்கள் எந்தெந்த பெரிய மனிதர் வீட்டுக் கல்யாணங்களுக்கு வேலை செய்திருக்கிறார்கள் என்ற விவரம்தான் பாக்கி.

தேன் நிலவுக்கு எங்கே போகலாம், எந்த ஹோட்டல்கள், எந்த டிராவல் ஏஜென்சி என்ன தள்ளுபடி தருகிறது போன்ற விவரங்கள் கூட உண்டு!

கல்யாணப் பத்திரிகையை சைட்டில் பிரசுரிக்கலாம். மொய் எழுதுவது கூட இன்டர்நெட் மூலம் வரப் போகிறதாம்!

எல்லாம் வசதியாகத்தான் இருக்கிறது. ஏனென்றால் பக்கத்து ப்ளாட்டில் மாப்பிள்ளை இருந்தாலும் தேட ஒரு 'வலை' தேவைப்படுகிறதே!

இந்த ரக சைட்டுகளில் கொடுக்கப்படும் விவரத்தைப் பார்த்தால் சீக்கிரமே, எந்தெந்த ஆஸ்பத்திரியில் குழந்தை பெற்றுக் கொள்ளலாம் என்கிற பட்டியல் கூட வந்து விடும் போலிருக்கிறது.

றோரின் சாத
னைகள் குறித்து இணைய மாநாட்டில் அவர்கள் கெட் அப்பிலேயே வந்த 'சரித்திர புருஷர்கள்' பேசியபோது நவீன தலைமுறையினர் வியந்து போய் ஒரு நிமிடம் தொடர்ந்து கரவொலி எழுப்பினார்கள்!'' என்று சந்தோஷத்துடன் நினைவு கூர்கிறார்கள், இந்தச் சென்னை தொழில் அதிபர்கள்.

இந்த கலக்கல் ஐடியாவின் பின்னணியில் வேறு காரணங்கள் உண்டா?

உண்டு என்கிறார் ஆனந்த் நடராஜன்.

டெலி இந்தியா நிறுவனம் வரும் ஆகஸ்ட் பதினைந்து முதல் tamil.com என்ற இணையத் தமிழ் இதழைத் தொடங்குகிறது. புலம் பெயர்ந்த எட்டு கோடித் தமிழர்களை ஒருங்கிணைக்கும் நோக்கத்தோடு இதைத் தொடங்குகிறார்களாம்.

''மற்ற இணைய இதழ்களைப் போல இது இருக்காது. நவீன தமிழ் இலக்கியத்திற்கு என்று தனி மேடை அமைக்கிறோம். சிறுகதை மற்றும் கட்டுரைகளை அசோக மித்திரனும், கவிதைகளை மனுஷ்யபுத்திரனும் தேர்ந்தெடுத்து, விமர்சிக்கப் போகிறார்கள். புதிய முகங்கள் யாரும், தங்கள் படைப்புகளை நேரடியாக ஈமெயில் மூலம் அனுப்பி வைத்தால் போதும்!'' என்கிறார் ஆனந்த் நடராஜன். tamil.com இதழின் ஆசிரியர் இவர்.

கடைசியில் நம்ம வழி தனி வழியே தான்! குருகுலம் நெட்டிற்கு வந்து விட்டது!

ஒரே ஒரு வித்தியாசம், குருகுல வாசத்தில் குருவிற்கு எப்போது வசதியோ அப்போது சொல்லிக் கொடுப்பார். இன்டர்நெட் குருகுலத்திலோ, சிஷ்யனுக்கு எப்போது சௌகரியமோ அப்போது படிக்கலாம். அதோடு அவனுக்கு இஷ்டப்பட்ட பாடத்தைப் படிக்கலாம்.



வர்ச்சுவல் பள்ளி, எனிடைம் கல்வி, எனிவேர் படிப்பு என்று கல்விக்காகப் பல வெப்சைட்டுகள் வந்துள்ளன.

gurucool.com, eguru.com, online varsity.com ஆகியவை இவற்றில் சில.

இவை பாடம் நடத்துகின்றன, பரீட்சை வைக்கின்றன. நுழைவுத் தேர்வுகளுக்கான மாதிரித் தேர்வுகள் நடத்தி மதிப்பெண் தருகின்றன. பங்குகொண்டவர்களில் உங்கள் ராங்க் என்னவென்று சொல்கின்றன.

வலை படிப்பின் வசதியென்று APTECH, NIIT கம்ப்யூட்டர் பள்ளிகள் கூறுவதாவது :

# காது திருகாத கம்ப்யூட்டர்

- மாணவன் தன் வசதிக்கு, சூழலுக்கு நேரத்திற்கு ஏற்றபடி படிக்கலாம்.
- வகுப்புக்குக் கால வரம்பு இல்லை.
- ஆசிரியரைக் கண்டு பயப்பட வேண்டாம்.
- ஆசிரியரும் மாணவரைக் கண்டு பயப்படத் தேவையில்லை.
- ஆசிரியர் பற்றாக்குறை அறவே நீங்கும். ஒரே ஆசிரியர் பல ஆயிரம் மாணவர்களுக்குப் பாடம் நடத்தலாம்.
- எல்லா மாணவர்களும் சிறந்த ஆசிரியர்களைப் பெறும் வாய்ப்பு உருவாகிறது.
- குக்கிராமம், மூலை முடுக்கு அனைத்திற்கும் தரமான கல்வி கிடைக்கும்.

என்ன, சுவையான அந்த வாத்தியார் - மாணவன் உறவு முறை இருக்காது. காதைத் திருக முடியாதே!

கம்ப்யூட்டர் கல்வியில் பிரகாசிக்கும் Aptechன் கல்வி வெப்சைட் Online varsity.com. இது தகவல் தொழில்நுட்பம், மற்றும் நிர்வாகவியல் வகுப்புகள் பல நடத்துகிறது. ஒவ்வொன்றும் ஒரு 'பாக்கேஜ்' போல. சைட்டிற்குள் நுழைந்தால் உங்கள் தகுதிக்கேற்ப என்ன கோர்ஸ் எடுக்கலாமென்று சொல்ல கவுன்சலிங் பகுதி.

பின் காய்கறி கடைக்குள் நுழைந்து 1 கி உருளை, 1/2 கி. தக்காளி, 1/4 கி அவரை



கணக்காக, JAVA ஒரு பொட்டலம், ஹார்ட்வேர் பராமரிப்புப் பாடம் ஒரு பாக்கெட் என்றபடி பிடித்த பாடங்களை அள்ளிக் கொள்ளலாம். கடைசியில் அதற்கான பில்லை ஆன்லைன் குருவே தந்துவிடுவார். செக், டிடி, கிரெடிட் கார்டு மூலம் பணம் செலுத்தினால் படிப்பிற்கான பாடங்கள் வீட்டுக்கு வரும். அதனுடன் 'வர்ச்சுவல் வகுப்பறைக்குள்' (Class Room) நுழைய சங்கேதச் சொல்லும் அனுப்புகிறார்கள்.

இந்த கோர்ஸ் 30 மணி நேரம்; காலக்கெடு 30 நாள் என்று குறித்து அனுப்பினால், அந்த முப்பது நாட்களுக்குள் நீங்கள் எந்த 30 மணி நேரம் வேண்டுமானாலும் சைட்டிற்குச் சென்று வகுப்பில் அமர்ந்து பாடம் படிக்கலாம்.

30 நாட்களுக்குள் 30 மணி நேரத்தை உபயோகிக்காவிடில் பாஸ்வேர்டு செத்துவிடும்! கோர்ஸ் காலி! சைட்டிலிருந்து பாடத்தை இறக்கிக் கொள்ளவும் முடியாது.

ஆன்லைன் பள்ளியில் பங்குகொண்ட படிப்புக்குச் சான்றிதழ் தருகிறார்கள். படித்தபின் நல்ல வேலை தேடித் தரும் தளமும் (placement) இங்கேயே இருக்கிறது.

கட் அடிக்கிற கலாசாரம் ஒழிய இதைப் போன்ற உன்னத வழி வேறு இருப்பதாகத் தெரியவில்லை.




"உள்ளொளிப் பயணர்" இறையன்புவின் சிந்தனைத் தொடர்



# புத்தகக் காடு!

உலகின் மிகப் பெரிய இணையப் புத்தகக் கடையான amazon.comக்கு ஒருமுறையாவது சென்று வராதவர்கள், புத்தக வியாபாரத்தின் விசுவரூப தரிசனத்தைக் காணும் பாக்கியம் இழந்தவர்களாவார்கள்.

இன்டர்நெட்டில் வியாபாரம் செய்யலாம் என்கிற நம்பிக்கை உண்டான ஆரம்பக் காலங்களிலேயே தன் கடையைத் திறந்து விட்டது அமேஸான்.

ஜூலை '95ல் இந்நிறுவனம் தொடங்கிய போது இணையம் வழி, ஒரு நாளைக்குத் தோராயமாக நூறு புத்தகங்கள் விற்றன.

இன்று ஒரு நிமிடத்துக்கு நூறு புத்தகங்கள்!

இன்னது தான் என்றில்லை, கலை, இலக்கியம், அறிவியல், வரலாறு, புவியியல், அரசியல், நகைச்சுவை, ஜோசியம், மருத்துவம், வர்த்தகம், சுயமுன்னேற்றம் — தோன்றுவதையெல்லாம் குறிப்பிட்டுக் கொள்ளுங்கள். உலகில் எல்லா நாடுகளிலும் வெளியாகும் எல்லா மொழி நூல்களையும் இந்த அமேஸான் புத்தகக் காட்டுக்குள் நாம் காணலாம்.

ஒவ்வொரு நூலுக்கும் எத்தனை பதிப்புகள், கைவசம் உள்ள பிரதிகள், விலை விவரம்,



ஆசிரியர் விவரம், நூல் பரிசுக் கட்டுமானமா, பேப்பர் பேக்கா என கேட்டுக்கேட்டுக் கொடுக்கிறது அமேஸான்.

குறிப்பிட்ட ஒரு நூல் என்றில்லாமல் சும்மா என்ன இருக்கிறது என்று பார்க்க விருப்பமா? அதற்கும் வசதி இருக்கிறது.

சக்தி மிக்க இதன் search engineகள் மூலம் ஆசிரியர் வாரியாக, படைப்பு வாரியாக, துறைவாரி யாக, தேசம் வாரியாக, ஆண்டு வாரியாகத் தேடித்தேடி தரிசிக்கலாம்.

நோபல், புக்கர் பரிசு பெற்ற நூல்கள், தடை செய்யப் பட்ட நூல்கள், விவகாரமான நூல்கள் என ஓலைச் சுவடி காலத்துக்குப் பிறகு வெளியான - எதை வேண்டு மானாலும் நாம் அமேஸானில் பெறலாம்.

இவர்கள் தம் விளம்பரங்களைப் பெரும்பாலும் பரிசுக் குழு தளங்களிலும் படைப்பிலக்கிய எழுத்தாளர் களின் ரசிகர் மன்றத் தளங்களிலும் வெளியிடுகிறார்கள்.

அங்கே போய் 'க்ளிக்' செய்தால் ஜிவ்வென்று நம்மை அமேஸான் தன் புத்தகக் காட்டுக்குத் தூக்கிப் போய், ''அந்த சைட்டுல இன்ன ரைட்டரோட புஸ்தகம் பத்தி படிச்சிட்டிருந்தியே, இதோ அது எல்லாம் என்கிட்ட விற் பனைக்குத் தயாரா இருக்கு பார். இத்தனை பர்சன்ட் தள்ளுபடி தரேன். வேணுமா?'' என்று ஆசை காட்டுகிறது.

வேண்டும் என்று விரும்பி னால் கிரெடிட் கார்டு மூலம் பணம் கட்டிவிட்டு, கூரியர்





மூலம் புத்தகங்களைப் பெற் றுக் கொண்டு விடலாம்.

சுமார் இரண்டு கோடி வாடிக்கையாளர்களை, உலக மெங்கும் பெற்றிருக்கும் அமே ஸான் பற்றிக் கடைசியாக ஒரு செய்தி

இந்தத் தளம் இன்று வரை லாபகரமாக இயங்கவில்லை!







# ஒரு தரம் ஒரே

டெலிஷாப்பிங் மூலம் பொருள்களை விற்பனை செய்வதெல்லாம் ரொம்பப் பழைய விஷயம். இன்டர்நெட் மூலம் பொருள்களை ஏலம் விடுவதுதான் சமீபத்திய சமாசாரம்.

இந்தியாவிலும் இந்தக் கம்ப்யூட்டர் வழி ஏலம் பிரபலமடைந்து கொண்டு வருகிறது. இதற்கான வலைத்தளங்கள் அதிகமாகிக் கொண்டு வருவது சாட்சி. இப்படி ஒரு வலைத்தளத்தை நடத்தி வரும் அவினாஷ் பஜாஜ் என்பவர் "இதில் 15,000 பேர் உறுப்பினர்களாகப் பதிவு செய்து கொண்டிருக்கின்றனர். கடந்த ஒரே மாதத்தில் 25,000 ஏலங்கள் நடந்துள்ளன" என்கிறார்.

இப்படிப்பட்ட ஏலங்களில் பங்கு கொள்ளும்போது சில விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டியது மிக முக்கியம்.

எந்த வலைத்தளத்தின் ஏலத்தில் பங்கு கொள்ள விரும்பினாலும், அவர்களது விதிமுறைகளை ஆழ்ந்து மனதில் பதிய வைத்துக் கொள்வது அவற்றில் ஒன்று.

இணையத்தளத்தில் பல்வேறு வகை ஏலங்கள் நடைபெறுகின்றன. அதில் எந்த வகை ஏலத்தில் நீங்கள் பங்கு கொள்கிறீர்கள் என்பதில் தெளிவாயிருப்பது அவசியம். வழக்கமான ஏலமென்றால் ஓர் அடிப்படை விலையை விற்பவர் குறிப்பிட, அதிலிருந்து மற்றவர்கள் ஏலத்தொகையை அதிகரித்துக் கொண்டே போக, மிக அதிகமான தொகைக்கு ஒப்புக் கொள்பவருக்கு அந்தப் பொருள் ஏலம் விடப்படும்.

இன்னொரு வகை ஏலத்தில் அடிப்படை விலையை மட்டுமல்ல; வேறொரு விருப்ப விலையையும் ஏலம் விடுபவர் குறிப்பிடுவார். இந்த விருப்ப விலையைவிடக் குறைவாகவே அதிகபட்ச ஏலத்தொகை அமைந்துவிட்டால், அந்தப் பொருளை அளிப்பதோ அளிக்காததோ ஏலம் விடுபவரின் இஷ்டம்!

மூன்றாவது வகை ஏலத்தில் மிக அதிகமான ஒரு தொகை கூறப்பட்டு சிறிது சிறிதாகச் சற்றே தொகையைக் குறைத்துக் கொண்டே வருவார். யாராவது ஓகே சொல்லிவிட்டால் டீல் முடிந்தது.

வாங்கப்படும் பொருளை நேரில் பார்ப்பதில்லை என்பது இந்த வகை ஏலத்தில் பெரிய குறைபாடு. எனவே ஏலம் விடுபவர்களிடம் எந்தச் சந்தேகத்தையும் கேட்கத் தயங்கக் கூடாது.

ஏலத்தில் வாங்கும் பொருள் உண்மையிலேயே அதற்கான தொகைக்கு ஏற்றதுதானா என்பதை அறிந்து கொள்ள அதே போன்ற பொருள்களை ஏலத்தில் விற்கும் வேறு சில வலைதளங்களுக்கும் சென்று ஒப்பிட்டுப் பார்ப்பது நல்லது.

ஜாம்!

பொருளை நம் இடத்திற்குக் கொண்டு வர, தேவைப்படும் போக்குவரத்துச் செலவு எவ்வளவு ஆகும் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

தொகையை எப்படித் தர வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். 'அகௌண்ட் பேயி' என்ற குறிப்போடு கூடிய காசோலையை ஏற்றுக் கொண்டால், விற்பவர் யார் என்பது குறித்து நாம் நிச்சயமாகத் தெரிந்து கொள்ள முடியும்.

இந்த வகை ஏலத்தில் நிறைய ஏமாற்று வேலை நடப்பதாகவும் செய்திகள் வருகின்றன. சென்ற வருடம் மட்டும் அமெரிக்காவில் உள்ள தேசிய நுகர்வோர் குழுவுக்கு ஒன்பதாயிரத்துக்கும் அதிகமானவர்கள் புகார் அனுப்பியிருக்கிறார்கள்! பணம் அனுப்பியும் குறிப்பிட்ட பொருள் வந்து சேரவில்லை என்றோ, ஏலத்தில் விவாதித்த பொருளுக்கும் அவர்கள் அனுப்பிய பொருளுக்கும் தரத்தில் மிக வேறுபாடு இருக்கிறதென்றோ, புகார் படிக்கிறார்கள்.

சென்ற மாதம் குத்துச் சண்டை வீரர் மைக் டைசனின் 'உலக சாம்பியன்ஷிப் பெல்ட்'கள் இரண்டை இந்த வகை ஏலத்தில் விடத் தொடங்கினார்கள். ஒவ்வொன்றிற்கும் குறைந்தபட்ச ஏலத் தொகையாக நிர்ணயித்தது 50,000 டாலர்கள். ஆனால் ஏலம் நடக்கத் தொடங்கிய உடனேயே போலீஸார் ஏலம் விடுபவரைக் கைது செய்தார்கள்!

காரணம், அப்படி ஏலம்விட மைக் டைசன் யாருக்கும் அனுமதி வழங்கியிருக்கவில்லை!

அந்தக் காலத்தில் வங்கி மேலாளர்களை 'ஏஜெண்ட்' என்பார்கள். வாடிக்கையாளர்களை வலை வீசிப் பிடிக்க வேண்டிய அவசியமிருந்ததால் அப்பெயர். ஏதோ ஒரு வகையில் வங்கி-வலைத் தொடர்பு அன்றே இருந்திருக்கிறது. இன்று வலையில் வங்கி! 'NetBank' கலாசாரம் சுறுசுறுப்பாகப் பரவ ஆரம்பித்திருக்கிறது. குட்டிக் குட்டி கட்டங்கள் போட்ட சலான் எழுதி கண் பார்வையைக் கெடுத்துக் கொள்ளாமல் கலப 'க்ளிக்'களில் வங்கி நம் வீட்டுக்குள் வந்து விடுகிறது. ஒரு சின்ன கவுண்டரில் கை நுழைக்க உள்ள இடைவெளி அளவே உள்ள கணிப்பொறித் திரையில் மொத்த வங்கியே வந்து விடுகிறது! வலை வங்கி எப்படி இயங்குகிறது? இந்தியாவின் முதல் 'நெட்பாங்க்'காரர்களான ICICI வங்கியின் துணைத் தலைவர் டி.எஸ். நாராயணனைச் சந்தித்துப் பேசினோம்:

**• நெட் வங்கி (NetBank) என்றால் என்ன?**

"இன்டர் நெட்டில் பல வர்த்தகத் தளங்கள் உள்ளன; வியாபாரம் செய்கின்றன. அதுபோல வங்கியும் ஒரு வர்த்தகத் தளம். வங்கி

இல்லாத வர்த்தகமா? icicibank.com என்பது எங்கள் வங்கித் தள முகவரி. உட்கார்ந்த இடத்திலிருந்தே இன்டர்நெட் மூலம் எங்கள் வங்கிக்குள் வரலாம், கணக்கு வழக்கு பார்க்கலாம், பரிமாற்றம் (transaction) செய்யலாம்."

**● நெட் வங்கியால் என்ன சௌகர்யம்?**

"ஏராளம்! முதல் விஷயம் அது இருபத்திநான்கு மணி நேரம், வாரம் ஏழு நாட்கள், வருடம் 365 நாளும் இயங்குகிறது. நெட் பாங்கிற்கு வாசல் உண்டு; மூடும் கதவில்லை! அகால நேரத்திலும்கூட வங்கியில் நுழைந்து பிசினஸ் நடத்தலாம். இரண்டாவது செயல்பாடு. அசுர வேகம். சாதாரண வங்கியில் ஒரு செயல்பாட்டுக்கு ஆகும் செலவில் பாதிதான் ATM சென்டரில் ஆகிறது. அதிலும் பாதிதான் இன்டர்நெட் வங்கியில். ஆக செலவுக்குறைச்சலான வங்கி வசதியும் இன்டர்நெட்டில்தான் கிடைக்கிறது. அடுத்து, பாரபட்சமின்றி, எல்லோருக்கும் ஒரே மாதிரி கனிவான புயல் வேக, எலக்ட்ரானிக் சர்வீஸ்."

**● உங்கள்**



# வீட்டுக்கு வரும் வங்கி!

**ICICI இன்டர்நெட் வங்கி பற்றி?**

"இந்தியாவின் முதல் இன்டர்நெட் வங்கியை 1997ல் தொடங்கிய பெருமை ICICIயைச் சாரும். அதேபோல மற்று மொரு முதல் - NYSE (நியூயார்க் ஸ்டாக் எக்ஸ்சேஞ்ஜில்) மார்ச் 2000ல் ICICI ஷேர்கள் லிஸ்ட் செய்யப்பட்டது. இன்று நாட்டில் 102 கிளைகள், ஏறக்குறைய 9 லட்சம் கணக்குள், அதில் ஒன்றரை லட்சத்திற்கு மேல் இன்டர்நெட் பாங்க் அக்கௌண்ட்ஸ் என வளர்ந்து விட்டோம். தனி நபர், (Retail) நிறுவனம் (Corporate) என கணக்குளை இரு பிரிவாகப் பிரித்து, அவர்களுக்குத் தேவையான சேவை செய்கிறோம்."

● **தனி நபர் வாடிக்கையாளர்களுக்கு நீங்கள் தரும் ஸ்பெஷல் கவனிப்பு?**

"கடந்த மூன்று ஆண்டுகளாக எங்கள் முழு முயற்சியும் அவர்களைக் கவரத்தான். பல வசதிகள் கூட்டிக் கொண்டே போகிறோம். இப்போது, சென்னையில் டெலிபோன் பில் கட்டுவதை வாடிக்கையாளர்கள் எங்கள் வங்கியின் சைட் மூலம் செய்யலாம். அவரது பில், வங்கி சைட்டில் இருக்கும். மூலையில் திரையில் 'PAY' பட்டன் ஒன்று இருக்கும். அதை க்ளிக்கினால் போதும்; பணம் உடனடியாக வாடிக்கையாளர் அக்கௌண் டிலிருந்து சென்னை டெலிபோன் அக்கௌண்டுக்கு மாறிவிடும்! மும்பையில் இதே போல மின்சாரக் கட்டணம் செலுத்தும் வசதி செய்திருக்கிறோம். இங்கேயும் அந்தத் திட்டம் விரைவில் வந்துவிடும். க்யூவில் நிற்காமல், வியர்வை சிந்தாமல் ஒரு 'க்ளிக்'கில் இப்படி வேலை களை முடித்து விடலாம். எவ்வளவு உழைப்பு, நேரம், செலவு மிச்சம் பாருங்கள்!"

● **தனி நபர் கணக்கிற்கே இத்தனை வசதிகள் என்றால் கம்பெனிகளுக்கு நெட் வங்கி கூடுதல் வசதியோ?**

"நிச்சயமாக. வங்கி தொடர்பான செயல்பாடு கம்பெனிகளுக்கு அதிகம் என்பதால் அவர்களுக்குக் கூடுதல் லாபம். உதாரணமாக, ஹிந்துஸ்தான் லீவர் நிறுவனத்தின் விநியோகஸ்தர் வசூலை நெட் மூலம் சட்டென முடிக்கிறோம். லீவர் சரக்கு அனுப்பியதும் அதன் பில் டெலிவரி சலான் ICICIநெட் வங்கிக்கு வரும். ஏற்கெனவே லீவர் - விநியோகஸ்தர் - வங்கி மூன்று தரப்பும் செய்து கொண்ட ஒப்பந்தப்படி வங்கி, பில்லுக்கான பணத்தை விநியோகஸ்தர் கணக்கிலிருந்து லீவர் கணக்கிற்கு மாற்றி விடும்! நொடியில் முடியும் இந்த வேலைக்கு, சாதாரண முறையெனில், ஒரு வார அவகாசம் பிடிக்கும்!"

● **NRIகளுக்கு ஏதாவது இருக்குமே?**

"அவர்களுக்காக MONEY 2 INDIA எனும் பிரத்யேகத் திட்டம் உள்ளது. வெளி நாட்டிலிருந்து இந்தியாவுக்குப்


• ரகுராமன்


• ஸ்ரீகாந்த்

## நெட்டு'ல பறிச்ச காய்!

**Www.pookaaikani. com**

**- இப்படியொரு வெப் சைட் தொடங்கியிருக்கிறார்கள், சென்னையைச் சேர்ந்த ரகுராமன், ஸ்ரீகாந்த் என்ற இருவர்.**

**என்ன சைட் இது?**

**உங்களுக்குத் தேவையான பூ, காய்கறி, கனிகள், பால், மினரல் குடிநீர் ஆகியவற்றை இவர்கள் தளத்துக்குச் சென்று ஆர்டர் கொடுத்தால், வீட்டுக்குக் கொண்டு வந்து கொடுத்து விடுவார்கள்! ஒரே நிபந்தனை - குறைந்த பட்சம் ரூ.150க்கு நீங்கள் ஆர்டர் கொடுக்க வேண்டும்!**

**"தற்போதைக்கு சென்னை நகரின் குறிப்பிட்ட**



பணம் அனுப்புவதை எளிதாகவும் வேகமாகவும் ஆக்கியுள்ளோம். வெளிநாட்டிலிருந்தபடியே அவர்கள் இன்டர்நெட்டில் ICICI வங்கி என்.ஆர்.ஐ. அக்கவுண்ட் தொடங்கலாம். பின் இந்தியாவில் யாருக்குப் பணம் அனுப்ப வேண்டுமென்ற விவரப்படிவத்தைப் பூர்த்தி செய்தால் போதும்! என்.ஆர்.ஐ. பணம் இந்தியா வந்து விடும்! பெறுபவர்க்கு ICICIவங்கியில் கணக்கு இருந்தால் உடனடியாக அவர் கணக்கில் சேரும். இல்லாவிட்டாலும் பெறுபவர் பெயரில் இந்திய ரூபாய் டி.டி.யாக அவர் இடத்திற்கு கூரியர் வழி போய்ச் சேரும்! அதோடு, நெட்டில் 'TRACKING' வசதி இருப்பதால் குறித்த நபரிடம் பணம் சென்ற டையும் வரை ஒவ்வொரு கட்டத்திலும் அதைக் கண்காணிக்கலாம்!''

● **நெட் வங்கி பாதுகாப்பானதா? நம் கணக்கிலிருக்கும் பணத்தை அடுத்தவர் சூறையாட முடியுமா?**

''நெட்டில் பல தள பாதுகாப்பு உள்ளது. முதற்கட்டம், பாஸ்வேர்ட். நாங்கள் அதை இரண்டாக்கியுள்ளோம். இன்னும் பல பாதுகாப்பு வழிமுறைகளும் உண்டு. நெட்டில் பாதுகாப்பு முறைகளை கண்காணித்து மேம்படுத்த என்றே எங்கள் நிறுவனத்தில் ஒரு தனிக் குழு உள்ளது!''

● **இன்டர்நெட் வங்கியில் பயன்பாட்டுச் செலவு குறைவு என்பதால் இனி கடன்களுக்கு வட்டி குறையுமா?**

'டெபாசிட், கடன் இரண்டிற்குமான வட்டி விகிதம் பல காரணங்களைக் கருத்தில் கொண்டு நிர்ணயிக்கப்படுகிறது. இந்த ஒரே காரணமென்றால் நிச்சயம் குறையும். தற்போதைக்கு டெபாசிட்களுக்கு வட்டி அதிகம் தருகிறோம்.''

● **கடைசியாக, நெட்டிலேயே கடன் வாங்க முடியுமா?**

*(சிரிக்கிறார்)*

''முடியாது! நெட் மூலம் விண்ணப்பிக்கலாம். நேருக்கு நேர் பாராமல் கடன் வழங்குவதில்லை!''

**சில பகுதிகளுக்கு மட்டும்தான் எங்களால் இச்சேவை செய்ய முடிகிறது. விரைவில் சென்னை முழுவதற்கும் கேட்டது கிடைக்கும் நிலை வந்து விடும்'' என்கிறார் ஸ்ரீகாந்த்.**

**வெப் சைட்டில் நுழைந்து கறிகாய் வாங்குபவர்கள் இருக்கிறார்களா என்ன?**

**''என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்...? வேலைக்குப் போகும் பெண்கள், பிரபல மருத்துவர்கள், நடிகை - நடிகர்கள், புகழ் பெற்ற அரசியல் பிரமுகர்கள் - இப்படி மார்க்கெட் போய் காய்கள் உள்ளிட்ட பொருட்கள் வாங்க முடியாதவர்கள், நேரமில்லாதவர்கள் பலர் எங்கள் சைட்டைத் தொடர்பு கொள்கிறார்கள். ஆர்டர் கிடைத்த 12 முதல் 24 மணி நேரத்துக்குள் நாங்கள் டெலிவரி செய்து விடுவோம்!'' என்கிறார் ஸ்ரீகாந்த்.**

# கவிஞர் சிம்ரன்?



• ஜோதிகா

இணையத்தில் இயங்கும் ரசிகர் மன்றங்களை எண்ணக் கடவுளால்கூட முடியுமா என்பது சந்தேகம். நடிகர்கள், அரசியல்வாதிகள், கலைஞர்கள், எழுத்தாளர்கள், பிஸினஸ் புள்ளிகள், விஞ்ஞானிகள், மேதைகள் என விரியும் ரசிகர் மன்றத் தளங்களின் எண்ணிக்கையை – வேண்டுமானால் நட்சத்திரங்களுடன் ஒப்பிடலாம். யாஹூ, ரீடிஃப், சத்யம் போன்ற மெகா இன்டர்நெட் நிறுவனங்களின் Search driveகளை இயக்கி யார் யாருக்கு எத்தனை எத்தனை ரசிகர் மன்றங்கள் உள்ளன என்று பட்டியல் பெறலாம்.

கடலில் ஒரு கையளவு அள்ளியது போல, நாம் சில ரசிகர் மன்றங்களை வலம் வந்தோம்.

ரஜினிகாந்த். 804 சைட்டுகள் இணையத்தில் ரஜினி புகழ் பாடுகின்றன.



• சிம்ரன்



• ரஜினி



• ரம்பா

ஆல், பால்,
ஓவியர், நாடகர்...
ஒரே மேடையில்!



1949ம் வருடம் டிசம்பர் 12ம் தேதி இம்மண்ணுலகில் 'அவதரித்தார்' என்கிற முதல் விவரத்துடன் வாழ்க்கை வரலாறு(கள்), புகைப்பட ஆல்பங்கள், படங்களின் வரிசை, பேட்டிகள், அண்ணாமலை, பாட்ஷா, முத்து, அருணாச்சலம் படப் பாடல்கள் (கேட்கலாம் + பார்க்கலாம்) என வலையில் ரஜினி விரிந்திருக்கிறார்.

இவை தவிர ரசிகர்களின் கற்பனைத்திறன், பக்தி ஆகியவற்றின் அளவுக்கேற்ப சில 'கிரியேட்டிவ்' டிசைன்களும் உண்டு. ஒரு வெப்சைட்டில் முதல் பக்கத்தில் 'உண்மை - உழைப்பு - உயர்வு' என்கிற பானர் கட்டி, ஒரு புறம் காந்தியும் மறுபுறம் ரஜினியும்! இன்னொரு பக்கம் ரஜினியின் 125 படங்களின் தலைப்புகளைக் கொண்டே அவருக்கொரு காதல் கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. ('என் மன்னா, பதினாறு வயதினிலே உன்னை நான் சந்தித்தேன். ஆயிரம் ஜென்மமெடுத்தாலும் நீதான் என் மாப்பிள்ளை' -



• ஜெயலலிதா



• கமல்

இத்யாதி)

இவை தவிர நீங்கள் ரஜினி ரசிகராக விரும்பினால் அதற்கு விண்ணப்பப்படிவமும் பூர்த்தி செய்த மறு விநாடி ஏனைய ரசிகர்களின் பட்டியலும் கிடைக்கின்றன.

ரசிகர்கள் இவ்வாறு பக்தி நெறி பரப்ப, மறுபுறம் புத்திஜீவிகள், ரஜினி அரசியலுக்கு லாயக்கா, இல்லையா என்பது பற்றிக் காரசாரமாகக் கத்தி சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ரஜினியின் மகள் ஐஸ்வர்யாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் போன்ற குடும்ப நிகழ்ச்சிகளின் தகவல் தொகுப்பும் உண்டு.

**கமல்ஹாசன்** : கமல் தொடர்புடைய 248 சைட்களிலும் ஹேராம், தெனாலி, மருதநாயகம் பற்றிய விவரங்கள் உள்ளன.

ஒரு வலை வீட்டில், ஜெயசீலன், தமிழரசன், நந்தினி என்று மூன்று ரசிகர்கள் அனு, அக்கா, ஆன்ட்டி ஸ்டைலில் தெனாலி எப்படியெப்படியெல்லாம் இருக்கும் என்று விவாதிக்கிறார்கள். ஹேராமிலிருந்து எல். சுப்ரமணியம் ஒதுக்கப்பட்டது பற்றி இன்னும் பலர் பேசிக் கொண்டிருக்கிறார்கள். (ஹேராம் ஏன் மக்களால் ஒதுக்கப்பட்டது என்பது பற்றி யாரும் பேசவில்லை)

கமல்ஹாசனே தொடங்கிய மருதநாயகம் சைட் ஒன்று இருக்கிறது. பழைய நாயகன் ஸ்டில்கள் இன்னும் காணக் கிடைக்கின்றன.

ஆராதனை அதிகமில்லை. அதனாலேயே சுவாரசியம் சற்றுக் குறைவு.



• மார்க்யூஸ்

**ஜெயலலிதா** : 5094 சைட்டுகளில் ஜெயலலிதாவின் அறிக்கைகள், பேட்டிகள், உண்ணாவிரத, கோர்ட், வழக்கு, நகை, திருமண, செருப்பு விவரங்கள் பல இறைந்து கிடக்கின்றன.

ஜெயலலிதா என்ற பெயர் எத்தகையது என்பது பற்றி ஒரு சைட்டில் பெயர் ஆராய்ச்சி நடத்தியிருக்கிறார்கள்.

சிறப்பான பணி, எதிலும் வேகம், ரத்தக் கொதிப்பு இருக்காது, அடிக்கடி மூட் அவுட் ஆகி எறிச்சலுறுபவர், புதிய சாதனையாளர்களை ஊக்குவிக்காத இயல்புடையவர், புரத உணவுப்ரியை, அடிக்கடி தலைவலி, தொண்டைவலி, காது வலிப் பிரச்னைகள் வரக்கூடும்.

இத்தகைய பெயர் ஆராய்ச்சி யார் செய்தது என்று பார்த்தால் பெரிய கோஷ்டியே இதன் பின்னால் இருக்கிறது.

உங்களுக்கும் personalised name report செய்து தருகிறோம். பெயரை இங்கே பதிவு செய்யுங்கள். பணத்தை நாங்கள் உங்கள் அக்கவுண்டிலிருந்து எடுத்துக் கொள்கிறோம் என்று வங்கிக் கணக்கு எண் கேட்கிறார்கள்!

**சிம்ரன்** : அம்மணிக்கு 610 சைட்டுகளில் பெயரும் புகழும் பரவிக் கிடக்கிறது. பெரும்பாலும் போட்டோக்கள். செஸ் போர்டு மாதிரி எட்டுக்கு எட்டு கட்டம் கட்டி, ஒவ்வொன்றிலும் ஒரு திருமுகம். எந்த போஸ் பிடித்திருக்கிறதோ, அங்கே சென்று 'கிளிக்' செய்தால், விஸ்வரூப தரிசனம் கிடைக்கிறது!

இப்படியே பார்த்துக் கொண்டு வந்த

போது சிம்ரன் எழுதிய கவிதைகள் எனச் சில தட்டுப்பட, திடுக்கிட்டுப் படித்துப் பார்த்தால் சுமாராக, சில நன்றாகவே கூட இருந்தன. அடடா, ஒரு கவிக் குயிலை கோடம்பாக்கம் இப்படி அடையாளம் கண்டுகொள்ளாமல் தொப்புளில் ஆம்லெட் போட்டுக் கொண்டிருக்கிறதே என்று வருந்தி, கவிதைகளைத் தீவிரமாக கவனித்து, 'ஹோம் பேஜ்'-க்கு போனால் - அடச்சே! யாரோ சிம்ரன் சிங்காம். பஞ்சாபிக் கவிஞர் அல்லது கவிதாயினி.

அதானே பார்த்தேன். கோலிவுட் எப்போது தவறு செய்திருக்கிறது?



• முஷரஃப்

**ரம்பா, ஜோதிகா :** இருவரும் முறையே 279, 152 சைட்டுகளில் குறிப்பிடப் பட்டிருக்கிறார்கள். ரம்பாவின் சொந்த சைட், படு அழகாக அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. வண்டி, வண்டியாக போட்டோக்கள். குளோசப்? மிட் ஷாட்? லாங் ஷாட்? (யாருக்கு வேண்டும்!) என்று கேட்டுக் கேட்டு தரிசனம் தருவதில் அம்மணிகளுக்குள் போட்டா போட்டி.

*ஒரு பக்கத்தில்,*
*இரண்டு வருடங்களாக*
*எங்கள் வானில்*
*நிலவே இல்லை*
*மண்ணில் ஜோதிகா*

என்று கவிதையெழுதியிருக்கும் பீட்டர் குமரகுருபரன் எங்கிருந்தாலும் தொடர்பு கொள்ளவும். கல்கி அலுவலகம் உட்பட தேசமெங்கும் பரவியிருக்கும் ஜோதிகா எதிர்ப்பணியினருடன் ஒரு ஒண்டிக்கு ஒண்டி நடத்திப் பார்த்து விடலாம்.

இன்னும் கலைஞர், ஏ.ஆர்.ரகுமான், மூப்பனார், இளையராஜா, விஜயகாந்த், பில் கேட்ஸ், கிளின்டன், முஷரஃப் (ஆம்! முஷரஃபுக்குத்தான்!) பிரபாகரன் என எத்தனையோ பேருக்கு எண்ணிலடங்கா துதி மண்டலங்கள் உள்ளன.

ஆனால் யாருக்கு மிக அதிக சைட்டுகளில் தொடர்பு தெரியுமா?

ஒரு நடிகருக்கோ, அரசியல்வாதிக்கோ, விளையாட்டு வீரருக்கோ அல்ல. எழுத்தாளருக்கு.

சுமார் ஒன்பதாயிரம் சைட்டுகளில் புகழப்படும், போற்றப்படும், விமர்சிக்கப்படும், விவாதிக்கப்படும்

அந்த எழுத்தாளர் - நோபல் பரிசு பெற்ற காபிரியேல் கார்ஷியா மார்க்யூஸ்.

லத்தீன் அமெரிக்க எழுத்தாளரான மார்க்யூஸுக்கு அவரது ரசிகர்கள் தனியே ஆளுக்கொரு 'வோர்ட்டல்' தொடங்கி, உள்ளே பல சானல்களில் அவரது பன்முக சாதனைகளைப் பட்டியலிட்டுப் புளகாங்கிதப்படுகிறார்கள்.

மார்க்யூஸின் நாவல்கள் சுருக்கம், அவரது மாஜிக்கல் ரியலிச உத்தி பற்றிய சிலாகிப்பு, அவரைப் பற்றி பிறர் பேசியவை, பிறரைப் பற்றி அவர் பேசியவை, பிடல் காஸ்ட்ரோவுடனான அவரது நட்பு, அவருக்குப் பிடித்த மீன்வகை, அவர் விரும்பும் சிகரெட், அவர் மனைவி அணியும் ஆடை, அவரது மெக்ஸிகோ வீடு பற்றிய வர்ணனை - இன்னதுதான் என்றில்லை.

நோபல் பரிசு பெற்றவர் என்பதால் அல்ல இது. இணையத்தில் ஏனைய நோபல் பரிசாளர்களெல்லாம்



மும்பை பிரபாதேவி பகுதியிலுள்ள சித்தி விநாயகர் ஆலயம் புராதனமானதும் புகழ்பெற்றதுமாகும். கூட்டம் எக்கச்சக்கமாக வரும். அர்ச்சனை செய்ய வேண்டுமென்றால் மணிக்கணக்கில்

குடிசை கட்டி வசிக்க (www.nobel.com சென்று பாருங்கள். அது ஒரு தனி அனுபவம்) இவரை மட்டும் கோட்டை கட்டிக் குடி வைத்திருக்கிறார்கள்.

எல்லாவற்றைவிட ஆச்சர்யம், மார்க்யூஸின் புகழ் பெற்ற கதாபாத்திரமான 'எரிந்திரா'வுக்கு ஒரு கோயிலே கட்டியிருக்கிறார்கள்.

சம்பந்தமில்லாமல் கட்டுரையின் நடுவே வரும் ஒரு அப்பாவிப் பெண் படம் யாருடையது என்று யோசித்தபடி அதன்மேல் மௌஸைக் கொண்டு போனால், 'எரிந்த்ரா' என்று விளக்கு எரிகிறது. உடனே பின்புறம் ஒரு ஒளி வட்டம் உருவாக, விநாடி நேரத்தில் இமேஜ் பெரிதாகி, திரையை ஒரு தேவதை நிறைக்கிறாள். (பின்னணியில் ஓம் ஓம் என்றுதான் கேட்கவில்லை)

டெக்னாலஜி வளர்ந்து எங்கேயோ போய்த் தொலையட்டும். உலக ரசிகர்களின் ஜாதி ஒரு போதும் மாறப் போவதில்லை.

---

வரிசையில் நின்றாக வேண்டும். இதெல்லாம் பழைய நிலைமை.

பக்தர்களின் நலன் கருதி இந்த சித்தி விநாயகர் இப்போது ஒரு வெப்சைட் ஆரம்பித்து விட்டார்!

பக்தர்கள் தம் பெயர், நட்சத்திரம், கோத்திரம் முதலிய விவரங்களைக் கொடுத்து அர்ச்சனைக்கு சொல்லி விட்டால் போதும். அர்ச்சனை நடந்து, பிரசாதம் கொரியரில் வீட்டுக்கு வந்து விடும்!

இந்த யோசனையை நடைமுறைக்குக் கொண்டு வந்தவர்கள் ICICI வங்கிக்காரர்கள். இந்த 'நெட் அர்ச்சனை' சேவைக்கான தொகை அவரவர் வங்கிக் கணக்கிலிருந்து கோயில் டிரஸ்ட் கணக்குக்கு மாற்றப்பட்டு விடும்.

சித்தி விநாயகர் டிரஸ்ட்டுக்கு ICICI யில் கணக்கு இருப்பதால், வங்கி கோயிலுக்குத் தன்னாலான இலவச சேவையாக இதனைச் செய்கிறது!



# நெட் பொருத்தம் நமக்கு உண்டா?

முன்னொரு காலம் தெருவுக்குத் தெரு "24%, 28%, 36%, 48% வட்டி பெறுங்கள்" எனக் கூவிக் கொண்டிருந்த நிதி நிறுவனங்கள் தொலைந்துபோய் இன்று அதைவிடப் பன்மடங்கு-எங்கு இரும்பினாலும் e-com, e-biz, dot.com எனும் கோஷம். இடையில் எங்கோ be-calm என்று கேலியாக இன்ஷூரன்ஸ் கம்பெனியின் விளம்பரம் வேறு!

இந்நிலையில், வலை வர்த்தகம் எங்கே செல்கிறது? அது இந்தியாவில் தழைக்குமா? முதற்கண் நமக்குத் தேவையா? பொருந்துமா? 'உங்க வலையெழுத்து சரியாயிருந்தாதான் நாடு முன்னேறும்' என்று சொல்லுமளவிற்கு ஒரு நாட்டின் முன்னேற்றமே வலையில் விழுந்திருக்கிறது என்பது சரியா?

இது எதையும் நூறு சதவிகிதம் சரி, தவறு, தேவை, அவசியமேயில்லை என்று சொல்லிவிட முடியாது. முதற் காரணம் இந்தத் தொழில் நுட்ப சாகசம் அமெரிக்காவின் வியாபார முறைகள், அவர்களது பிரச்னைகளை மனத்தில் கொண்டு ஏற்பட்டது.

பொழுது விடிந்தால் அவர்களுக்கு 'missile' பிரச்னை; நமக்கு meals பெரும் பிரச்னை. அங்கு எல்லோர் வீட்டிலும் கம்ப்யூட்டர் இருக்கும். ஜனத்தொகை குறைவு. வியாபாரத்தில் போட்டி அதிகம். ஏற்றுமதிகளின் கட்டாயம்; உலக சந்தையைக் கண்காணிக்க வேண்டியது மிக அவசியம். அங்கு காலத்தின் மதிப்பும், மனித வளத்தின் விலையும் அதிகம். ஆக எதையும் குறுகிய நேரத்தில், குறைந்த ஆட்பலம் கொண்டு, எளிதாகச் செய்து முடிப்பது அவர்களுக்கு முக்கியம். அதற்கான வழிமுறை

களை சதா தேடிக் கொண்டே இருப்பார்கள். அதன் விளைவே இந்த முன்னேற்றம்.

அதோடு உலக வர்த்தகத்தின் நிலை கம்ப்யூட்டர் திரையில் ஒரு 'க்ளிக்'கில் தெரிந்து விட்டால் அவர்களுக்கு அதை ஆட்டிப் படைப்பதும் எளிதாகிவிடும். வலைமய மாக்குவதில் இது ஒரு கூடுதல் லாபம்.

ஆனால், நம் நாட்டில் ஜன சமுத்திரம். பல வேலைகள் இன்னும் இயந்திரமயமாகக் கூடவில்லை. வாஷிங் மெஷினிற்குக் கொடுப்பதை வீட்டுப் பணியாளருக்குக் கொடுக்கலாம்; ஒரு குடும்பம் பிழைக்கும் எனும் நிலைமை.



இருப்பினும் வலையினால் வாழ்க்கையின் வேகத்தையும், வர்த்தகத்தின் வேகத்தையும் அவர்கள் அதிகரித்து விட்டார்கள். நாமும் சேர வேண்டிய நிர்ப்பந்தம் உருவாகி விட்டது. இல்லையெனில் உலகச் சந்தையில் நாம் பின் தங்க நேரிடும்.

வலையில் நல்லது கெட்டது உண்டு. அன்னப்பறவை போலப் பிரித்து நமக்கு, நம் நாட்டு நடைமுறைச் சூழலுக் கேற்பத் தேவையானவற்றை எடுத்துக் கொண்டு முன்னேற லாம்.

உதாரணமாக, இரயில் டிக்கட்டிற்கு 20 கி.மீ. பஸ்ஸில் சென்று 4 கி.மீ. க்யூவில் நிற்கிறோம். அதை இன்டர்நெட் வழியில் கிடைக்கச் செய்வது நமக்குப் பெரும் வசதி!

அதே போன்று, மின்சாரக் கட்டணம், டெலிபோன் பில், கல்லூரிகள்-பள்ளிகளின் நுழைவுப் படிவம்.

ஆனால், மேல் நாடுகள் போலச் சூதாட்டத்தை இன்டர நெட்டில் நுழைப்பதில் என்ன லாபம்?

B2B என்கிற பிஸினஸ்-டு-பிஸினஸ் தொழில்-வர்த்தகம் வேகமாக இந்தியாவிலும் நெட்மயமாகிறது. அது செய்து தரும் வசதிகளே காரணம்.

டாப் டக்கர்
டாப் 10
எவை?

Log on to tamil.SatyamOnline.com



● அங்கு சூப்பர் மார்க்கெட், கடைகள் நகரின் முக்கிய இடங்களில் மட்டும் இருக்கும். காரை எடுத்துக் கொண்டு கடைக்குப் போய்த் தேடி வாங்குவதைவிட அவர்களுக்கு நெட்டில் வாங்குவது எளிது!

நம்மூரில், தெருவெல்லாம் கடைகள். பாரதிராஜா படம் போல கைதட்டினால் வீட்டிற்குள் டீ. வீட்டிலிருந்து இறங்கினால் சூப்பர் மார்க்கெட்! அதோடு, நமக்கு இன்னும் நடக்கும் பழக்கம் இருக்கிறது. அது அங்கு மிகக் குறைவு. கடைக்குச் செல்வது நமக்கு ஒரு மினி திருவிழா.

● நமது வாங்கும் முறையே தனி. பொருளைத் தொட்டுப்பார்த்து, சேல்ஸ் மேனோடு (பேரம்) பேசிப் பழகி... அங்கு அப்படியில்லை!

ஒரு தொழிற்சாலைக்குக் குறிப்பிட்ட ரசாயனம் தேவை என்றால் நெட்டில் நுழைந்து கண நேரத்தில் யார் யார் அதைத் தயாரிக்கிறார்கள், என்னென்ன கிரேடுகள், என்ன விலை, டெலிவரி எப்போது, இப்படி எல்லா விவரமும் பெறலாம். நெட் மூலமாகவே டெண்டர் முறையில் பரிசீலனை செய்து ஆர்டரும் வழங்கலாம், பணமும் செலுத்தலாம்; பொருளும் பெறலாம்! ஒரு துளி வியர்வை சிந்தாமல் உலகின் எந்த மூலையிலிருந்தும் பொருளை சாதகமான விலையில் பெற நெட் உதவுகிறது. இதனால் B2B வர்த்தகம் இங்கேயும் பெருகும் என்று கூறுகிறார்கள்.

B2C அவ்வளவு எளிதல்ல. குறிப்பாக, இங்கே வீட்டு மளிகை வாங்குவதையோ, டீ.வி., மிக்ஸி வாங்குவதையோ எடுத்துக் கொள்வோம்.

அமெரிக்காவில் இதுபோன்ற வியாபாரம் நெட்டில் சக்கைப்போடு போடுகிறது.

இங்கே? நமக்குப் பல இடர்பாடுகள்.

● அமெரிக்காவில் வீட்டுக்கு வீடு கம்ப்யூட்டர். ஒரு வார சம்பளத்தில் ஒரு கம்ப்யூட்டர் வாங்கலாம். நம் நாட்டில் நடுத்தர வர்க்கத்தின் கிட்டதட்ட ஒரு வருட சம்பளம் தேவை. கம்ப்யூட்டரின்றி நெட் ஏது?

● நெட்டில் வாங்கும் பொருட்களின் தரம். நேரில் சென்று தட்டிப் பார்த்து வாங்கும் போதே இங்கே ஆயிரம் பிரச்னை. அங்கே எல்லா பொருட்களும் தர நிர்ணயம் பெற்றவை. நெட்டில் வாங்கினாலும், அதன் தரம் மாறாமல் இருக்கும். இங்கே இன்டர்நெட்டில் காய்கறி வாங்கிவிட்டு, வந்து சேர்ந்தபோது அழுகி விட்டதே என சண்டைபிடிக்க வாய்ப்புகள் ஏராளம்.

● தவிர, நெட் வர்த்தகத்துக்கு ஜீவநாடியான கிரெடிட் கார்டு கலாசாரம் இங்கு இன்னும் பரவலாகவில்லை.

● எல்லாம் சரியென்று எடுத்துக் கொண்டாலும் நம் நாட்டில் இன்னும் இன்டர்நெட் வேகம் பிடிக்கவில்லை. குறைந்த band width காரணத்தால் ரொம்ப நிதானமாகவே சைட் கடை விரியும். நெட்டில் நுழைந்து ஆர்டர் செய்வதற்குள் நாலு எட்டில் போய் வாங்கி வந்துவிடலாம்!

ஆக இந்தியாவைப் பொறுத்தவரை ஜாம்பவான்களின் கணிப்பு– B2B வர்த்தகம் சூடு பிடிக்கும்; B2Cகொஞ்ச காலம் திணறும் என்பதே!



# Jyothy Laboratories Ltd.

## ‘‘உஜாலாவின் உன்னத வெண்மை விஞ்ஞான ரீதியிலான சாதனை.’’




**ஜோ**தி லேபின் ஆய்வுக் கூடத்தில் தொடர்ந்து நன்கு சோதிக்கப்பட்டு வெற்றிகரமாக நிரூபிக்கப்பட்ட உஜாலாவின் இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் (I.W.S.)™ இது தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளிலும் ஆழ்ந்து ஊடுருவிவெண்மையின் வெளிச்சத்தை துணிகளில் உடனடியாய் வெளிக்கொணர்கிறது. துணிகள் மீண்டும் துவைக்கும்போது, அழுக்குடன் முழுவதும் வெளியே தள்ளப்பட்டு விடுகிறது. நாட்கள் பல ஆனாலும் துணிகளின் இயல்பான வண்ணம் மாறாமல் புதிது போலவே பாதுகாக்கிறது. ஸ்கின் இரிட்டேஷன்-ஓரல் டாக்சிசிடி சோதனைகளில் பாதுகாப்பானது என ஆதாரபூர்வமாக கண்டறியப்பட்ட தயாரிப்பு உஜாலா ஒன்றே.

**1983** முதல் அனேக கோடி உள்நாட்டு-வெளிநாட்டு வாடிக்கையாளர்களுக்கு முழுதிருப்தியை உஜாலா வழங்கிக் கொண்டிருக்கிறது. பாரத நாடெங்கும் பல மாநிலங்களில் உள்ள ஜோதி லேபின் விஞ்ஞான தொழில் நுட்ப மேன்மை மூலம் கடும் தரக்கட்டுப்பாடு முறைகளால் தயாரிக்கப்பட்டு ஒவ்வொரு உஜாலாவும் உங்களை அடைகிறது.

**வி**ஞ்ஞான ஆதாரமற்ற முறையில், இரசாயன நிறுவனங்கள் தயாரிக்கும், நூலிழைகளை பலவீனப்படுத்தும், வண்ணம் குறைக்கும் மூலப்பொருட்கள் ஏதும் இதில் இல்லை. தரங்குறைந்த, கலப்பட இரசாயனக் கலவைகள் உங்களின் துணிகளுக்கு சேதம் ஏற்படுத்த இடம் அளிக்காதீர்கள்.

உஜாலா என கேட்டு வாங்கும் போது விஞ்ஞானபூர்வமற்ற ஏதேனும் ஒரு போலி தயாரிப்பை நீங்கள் பெறவில்லை என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.




வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.

